கழக வெளியீடு : ௫௫௬

# கோவலன்

திருவாளர்
சு. அ. இராமசாமிப் புலவர்
எழுதியது

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி : : சென்னை

# பதிப்புரை

"அறங்காவல் கற்பிரக்கம் ஆண்மைமுறை தெய்வத்
திறங்கோ வலன்கதைக்கண் தேர்."

உடலுக்கு உயிர் போன்று, நாட்டுக்கு நன் மக்கள் இருக்கின்றார்கள். அவர்கள் தம் மெய்வரலாற்றினைச் செந்நாப் புலவர்வழிக் கேட்பதே சீரியதாகும். அக்கேள்வியே ஊன்றுகோல் போல் உயிருக்கு உற்றுழி உதவும்.

புலன் அழுக்கற்ற அந்தணாளச் செம்மல் - ஆசிரியர் 'இளங்கோ அடிகளால்' பாடி அருளப் பெற்ற சிலப்பதிகாரம் என்னும் தனித் தமிழ் முதல் நூல், நம் பண்டைத் தமிழ் மக்களின் சீரிய வரலாற்றினைத் திறம்பட விளக்கும் 'தொடர்நிலைச்செய்யுள்' ஆகும்.

இம்மெய்ந்நூற்கண் சீர்மிகு அறமுறை பிழைப்பின் அறக்கடவுள் தண்டிக்கும் என்பதும், காவலன் உயிரினும் சிறந்தது முறை என்பதும், முறை தவறியவிடத்து உயிர்விடுவான் என்பதும், நாட்டுக்கும் நன்மக்களுக்கும் பணிசெய்வதே உண்மைத் துறவியின் இயல்பென்பதும்; அடைக்கலப் பொருளை ஆவியின் மேலாகப் போற்றுவதே அன்புநிறை இல்வாழ்க்கை என்பதும், முறையின்மையை எடுத்துக் காட்டி வழக்கிடுதல் நிறையுடைப் பெண்டிர் நீர்மை என்பதும், அங்ஙனம் காட்டிய கற்புக் கடம்பூண்ட, பொற்புடைப் பெண்டிரைத் தெய்வமாகப் போற்றிப் புகழ்தல் முனிவர் உள்ளிட்ட யாவர்க்கும் கடமை என்பதும், வாய் காவா வடவரைத் தாய்நாட்டின் பற்றால் போர்செய்துவென்ற செங்குட்டுவனைப் போன்று செந்தமிழ்நாட்டின் சிறப்பினைப் பேணுவதே உயிரினும் சிறந்ததெனக் காட்டுதல் ஆண்மை வேந்தர், ஏண்மை மறவர் மேன்மை என்பதும் தெள்ளிதிற் காணலாம்.

இந்நூலைக் கற்பார்க்கு வள்ளுவனார்,

"மறமானம் மாண்ட வழிச்செலவு தேற்றம்
எனநான்கே ஏமம் படைக்கு"

என்றபடி ஆண்மையும், ஆற்றலும், ஏற்றமும், எழிலும் தாமே வந்துறும்.

இவ் வரிய பெரிய வரலாற்றினை, மாணவர்க் கேற்ற வாறு இனிய எளிய முறையில் கதைப்போக்காக முப்பது பெருந் தலைப்புகள் அமைத்துக் "கோவலன்" எனப் பெய ரிட்டு வெளிப்படுத்தி யிருக்கின்றோம்.

இந்நூலினையும், மாணாக்கா, ஆசிரியர் முதலியோர் வாங்கிக் கற்றும் கற்பித்தும் பயனெய்துவார்களாக. இந் நூலினை ஆக்கித் தந்த ஆசிரியர் திரு. சு. அ. இராமசாமிப் புலவர் அவர்களுக்கு எங்கள் நன்றி உரித்தாகுக.

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

# பொருளடக்கம்

புகார்க் காண்டம்.

வஞ்சிக்காண்டம்

# கோவலன்

## சிலப்பதிகாரக் கதை

## புகார்க் காண்டம்

### 1. மங்கல வாழ்த்து

திங்கள்

திங்களைப் போற்றுதும் திங்களைப் போற்றுதும்
கொங்கலர்தார்ச் சென்னி குளிர்வெண் குடைபோன்றிவ்
வங்கண் உலகளித்த லான்.

ஞாயிறு

ஞாயிறு போற்றுதும் ஞாயிறு போற்றுதும்
காவிரி நாடன் திகிரிபோற் பொற்கோட்டு
மேருவலந் திரித லான்.

மழை

மாமழை போற்றுதும் மாமழை போற்றுதும்
நாமநீர் வேலி யுலகிற்கு அவன்அளிபோல்
மேல்நின்று தான்சுரத்த லான்.

புகார்

பூம்புகார் போற்றுதும் பூம்புகார் போற்றுதும்
வீங்குநீர் வேலி யுலகிற் கவன்குலத்தோடு
ஓங்கிப் பரந்தொழுக லான்.

## காவிரிப்பூம் பட்டினம்

இமயமலையைப் போன்றும் பொதிய மலையைப் போன்றும் எக்காலத்தும் நிலைபெற்ற தன்மையினை யுடையது காவிரிப்பூம் பட்டினம். தன்னிடத்தில் வாழுங் குடிகள், ஏதேனும் ஒரு குறையை முன்னிட்டுக் குடிப் பெயர்தல் எக்காலத்திலும் இன்மையால், மிகப் பழங் குடிகள் பொருந்திய மாண்பினை யுடையது இவ்வூர். இக் காவிரிப்பூம் பட்டினமும் (அம்மலைகளைப்போன்று) எக்காலத்தும் அசைவின்றி நிலைபெற்று நிற்பதென்று கூறுவதல்லாமல் நல்ல நூல்களை யறிந்த புலவர்கள் ஒரு காலமும் முடிவு கூற மாட்டார்கள்.

## கோவலன் திருமணம்

இக் காவிரிப்பூம் பட்டினம் உயர்ந்த விண்ணுலகத்தைப் போன்று சிறந்த புகழையுடையது. நாகர் உலகம் போன்று இன்பம் நிரம்பியது. இவ்வூரில் இருபெருஞ் செல்வ வணிகர்கள் இருந்தார்கள். ஒருவன்பெயர் மாநாய்கன். இவன் காரைப் போன்று கைம்மாறு கருதாது கொடுக்குங் கொடையை யுடையவன். இவனுக்கொரு மகள் இருந்தாள். அவள் அவனுடைய குலத்திற்குக் கொழுகொம்பு போன்றவள். செந்தாமரை மலரி லெழுந்தருளியுள்ள திருமகளை நிகர்த்த அழகினையுடையவள். அருந்ததியை யொத்த கற்பினை யுடையவள். பெண்களனைவரும் வணங்கும்படியான சிறந்த பண்புகளை யுடையவள். கண்ணகி யென்பது அவளுடைய நிலைபெற்ற பெயர். அவளுக்குப் பன்னிரண்டாண்டு அகவை நிரம்பியது.

மற்றொரு வணிகனுடைய பெயர்மாசாத்துவன். அவன் அக் காவிரிப்பூம் பட்டின மன்னனாகிய திருமா வளவனையே தலைமையாக வைத்துப் போற்றும் ஒப்பற்ற குடியினுக்குரியவன். மிகுந்த செல்வத்தை யுடையவன். தன்னுடைய செல்வப் பெருக்கை அனை வரும் நுகரும்படி செய்பவன். இவனுக்கொரு மகன் இருந்தான். அவன் பதினாறாண்டு அகவை நிரம்பப் பெற்றவன். பூமியுஞ் சிறிதாகும்படி வளர்ந்த பெரும் புகழையுடையவன். இனிய மொழியினையும் திங் களைப் போன்ற முகத்தினையுமுடைய மங்கையர் கூட் டத்தாலே 'செவ்வேள் இவனே' என்று போற்றிப் பாராட்டப் பெறுஞ் சிறப்பினையுடையவன்; இவனு டைய பெயர் கோவலன் என்பது.

இத்தன்மைகளையுடைய நம்பிக்கும் நங்கைக்கும் திருமணஞ் செய்து மகிழ, இவர்களைப் பெற்றோர் பெரு மகிழ்வுடன் முடிவுசெய்தனர். உடனே இத் திருமணச் செய்தியை; அக்கால முறைப்படி வைம் மாவின் பிடரியிலே மாதிகையரை யேற்றிக், காவிரிப் பூம் பட்டின மக்களுக்கெல்லாம் அறிவிக்கச் செய் தனர்.

எங்கெங்கும் திருமணத்திற்கான ஏற்பாடுகள் செய்யப்பெற்றன. பேரிகைகள் ஒலித்தன. மத்தளம் முதலியன அதிர்ந்தன. சங்கு முதலியவைகள் முழங் கின. அரசன் திருவுலாக் காலத்திலே யெழுவதைப் போல வெண்கொற்றக் குடைகள் எழுந்தன.

மாலைகள் கட்டித் தொங்கவிடப் பெற்றதும் வயிர மணித்தூண்கள் நாட்டப் பெற்றதுமாகிய மண்டபத் திலே; நீலப்பட்டினாலே மேற்கட்டி யமைக்கப்பெற்ற

முத்துப் பந்தரின் கீழே திருமணவினை இனிது நிகழ்ந் தது. விண்ணின்கண் இயங்குந் திங்கள் உரோகிணி யைச் சேர்ந்த நல்ல நாளிலே; அருந்ததியைப் போலுங் கற்பினையுடையவளாகிய கண்ணகியைக் கோவலன் திருமணம் புரிந்தான். மறைகளை யுணர்ந்த பார்ப்பான் அப்போது மறை முறைப்படி மணவினைகளைச் செய் வித்தான். கோவலனும் கண்ணகியும் மணவேள்வித் தீயினை வலம் வந்தனர். இத் திருமணக் காட்சியினைக் கண்ட மக்கள், 'நாமிதனைக் காண்டற்கு யாது நல் வினை புரிந்திருந்தனம்?' என்று கூறி மகிழ்ந்தனர்.

அப்போது அழகிய பல மங்கையர் சந்தனம் முத லிய நறுமணப் பொருள்களையும் மலர்களையும் ஏந் தினர். சிலர் வாழ்த்துரை வழங்கினர். சிலர் திருமண வாழ்த்துப் பாடினர். சிலர் மணந்தங்கிய சுண்ணப் பொடிகளைத் தூவினர். சிலர் திருவிளக்கெடுத்தனர். சிலர் நன்கலங்களைத் தாங்கினர். சிலர் முளைக்குடம் ஏந்தினர். சிலர் முளைக் குடங்களைத் தூக்கினர். இவ் விதமாக வந்து திரண்ட மகளிர் "இக் கண்ணகி யான வள் தன்னுடைய காதலனைப் பிரியாதிருக்கக்கடவள். இவள் கணவனும் இவளைத் தழுவிய கை நெகி ழாதிருக்கக்கடவன். எம்மரசனாகிய திருமாவளவன் இமயமலைக்கு இப்பால் எழுதிய புலிக்கொடி இம் மலைக்கு அப்பாலாகிய மேரு மலையையும் அளாவுக என்று நல்லுரைகள் கூறிக் கோவலனையுங் கண்ணகி யையும் மங்கல அமளியிலே ஏற்றினார்கள்.

## 2. மனையறம்படுத்தல்

### புகாரின் சிறப்பு

பெரும் புகழமைந்த சிறப்பினையுடைய அரசர் களும் விரும்பத்தக்க, செல்வத்தினையுடைய வணிகர் களால் நிரம்பப்பெற்றது காவிரிப்பூம்பட்டினம். ஒலிக் கின்ற கடலாற் சூழப்பெற்ற இவ்வுலகத்தி லுள்ளா ரனைவரும் ஒருங்குவந்து கூடினராயினும்; அவர்க ளனைவரும் நுகரத்தக்க எல்லாப் பொருள்களையும் தானே தரத்தக்க சிறப்பினையுடையது அவ்வூர். வண்டிகளாலும் மரக்கலங்களாலும் இடையறாது கொண்டுவந்து சேர்த்தலால் பல வகைப்பொருள் களையுமுடைய பல தேசங்களும் ஒருங்குவந்து சேர்ந் திருப்பதைப் போன்றதுமாகும் அவ்வூர்.

### இன்பத் திளைப்பு

நல்ல குடியிற் பிறந்த செல்வர்கள்; அச்செல்வத் திலேயே செய்யத்தக்க அறத்தினைச் செய்து முடித்த தன் பயனுகப் பிறந்து நல்வினைப் பயனை நுகரும் போக பூமியைப் போன்றதுமாகும் அவ்வூர். இத்த கைய சீரிலே மிக்க ஊரிலே தோன்றிய கோவலனுங் கண்ணகியும்; தெய்வத் தச்சனுற் செய்யப்பெற்ற தைப் போன்ற நீண்ட நிலையினையுடைய மாடத்திலே களிப்புடன் அமர்ந்திருந்தனர்.

அப்போது தென்றற்காற்று செங்கழுநீர், ஆம் பல், குவளை, மற்றுமுள்ள வயற்பூக்கள் ஆகியவற்றின் மணத்தினை வாரிக்கொண்டு சாளரவாயிலாலே உள்

நுழைந்து காதலர்க்கு மிகுந்த களிப்பினையுண்டாக்கியது. இளங்காதலர்களின் காதல் பெருகி வளர்ந்தது. இருவரும் இடைமாடத்தை நீங்கி வேலிற் கடவுள் விழாக் கொண்டாடும் மேல் மாடத்தை யடைந்தனர். அப்போது கோவலன் தன்னுடைய காதலியின் தோளிலே கரும்பும் வல்லியும் எழுதினான். பல மலர்கள் பரப்பப்பெற்ற சேக்கையிலே அவர்கள் அமர்ந்தனர். அக்காதலர் இருவரும் ஒன்றாக அமர்ந்திருந்தகாட்சி ஞாயிறும் திங்களும் ஒன்றாக அமர்ந்திருந்தாற் போன்றிருந்தது. அப்போது அவர்களணிந்திருந்த மல்லிகை மாலையும் செங்குவளை மாலையும் குலைந்து பிரியும்படி இன்பவெள்ளத்தில் இளிது திளைத்திருந்தனர்.

## நலம் புனைந்துரைத்தல்

காதலியோடு இன்பக்கடலாடிய கோவலன், நன்றி பாராட்டும் முகத்தால் அவளைப் பலவாறு புனைந்துரைக்கலானான்; பிறைத்திங்களானது தேவர்களும் வணங்கும்படி இறைவனாலே அருமையாக அணியப் பெற்றதாயினும் அது நின்னோடு பிறந்த தாதலின் நினக்குத் திருநுதலாகத் தரக்கடவன். பகைவரின் போர்முனையிடத்திலே போரில் மேம்படுகிறவர்கட்குப் படை வழங்குவது இயல்பாகலின், வடிவமற்றவனாகிய வேளிலான் தனது கரும்புவில்லை நினது இருகரும் புருவமாகத் தரக்கடவன். தேவர் அமுதத்திற்கு முன்னர் நீ பிறந்தனையாகலின், தேவர் கோமான் தனது வச்சிரப்படையை நினக்கு இடையாகத் தரக்கடவன். ஆறுமுகங்களையுடைய முருகன் யாதாமோர் உரிமையுமின்றித் தனது வேற்படை

யினை யான்படுந் தொல்லையினைக்கண்டு மகிழவே நின் முகத்தில் இரண்டுகண்களாக அமைத்திருக்கின்றான். மிகப்பெரிய பீலியினையும் அழகிய நிறத்தினையு முடைய மயில்கள் நின் அழகிற்குத் தோற்றுக் குளிர்ச்சி பொருந்திய காட்டிற்குப் போய்விட்டன. அன்னப்பறவையானவை நினது அழகிய நடைக்குத் தோற்று நல்ல நீரையுடைய வயலிலேயுள்ள மலர் களிடையே சென்று மறைந்துகொண்டன. சிறிய பசுங்கிளிகள் நின்னால் அருள் செய்தலைப் பெறத்தக் கன. அவைகள் குழலிசையையும் யாழிசையையும் அமுதத்தையுஞ் சேர்த்துக் குழைத்தாலொத்த நினது மழலைச் சொல்லுக்குத் தோற்றனவாகியும், அச்சொல் லைத் தாங்கேட்டு மகிழவேண்டியும் பழக வேண்டியும் உன் மலர்க் கையினைவிட்டுப் பிரியாவாயின. நினது குற்றமற்ற மங்கல வணியி ருக்கவும்; நினக்குப் பலவித அணிகளை அணிந்து அழகு செய்யும் பெண்கள் வேறு சில அணிகளை அணிந்தது எதன் பொருட்டோ? நினது கரியகூந்தலினிடத்தே சில மலர்களை யணிதலே போதுமானதாக விருக்கவும் .நீண்ட மாலையினைப் புனைந்தது எதன் பொருட்டோ? நினது கூந்தலுக்கு அகிற்புகை கொடுத்தலொன்றே போதுமானதாகவும் அதனோடு மான்மதத்தினையும் அணிந்தது எதன் பொருட்டோ? அழகிய மார்பினிடத்திலே தொய்யி லெழுதுதலே போதுமானதாகவும் அதனோடு முத்து வடத்தையும் அணிதல் எதன் பொருட்டோ? திங்களைப் போன்ற நினது திருமுகம் வியர்வை நீரை வெளிப்படுத்தவும்; நுண்ணிய இடை வருந்தவும் நின்னை யிவ்வாறு பலவித அணிகளாற் சுமையேற்றி வருத்திய அப்பெண்களின் அறிவு யாதாயிற்று?

"மாசறு பொன்னே வலம்புரி முத்தே
காசறு விரையே கரும்பே தேனே
அரும்பெறற் பாவாய் ஆருயிர் மருந்தே
பெருங்குடி வாணிகன் பெருமட மகளே
மலையிடைப் பிறவா மணியே யென்கோ
அலையிடைப் பிறவா அமிழ்தே யென்கோ
யாழிடைப் பிறவா இசையே யென்கோ
தாழிருங் கூந்தல் தையால் நின்னை..."

குற்றமற்ற பொன்னையும், வலம்புரியீன்ற முத்தையும், நல்ல மணத்தையும், கரும்பையும், தேனையும், அருமையான ஓவியப் பாவையையும் அமுதத்தையும் போன்றவளே! பெருங்குடியிற் பிறந்த வணிகனுடைய பெரிய மடப்பத்தையுடையவளே! "நீ மலையினிடத்திலே பிறவாத மணியென்று சொல்லுவேனோ? கடலினிடத்திலே பிறவாத அமிழ்தமென்று சொல்லுவேனோ? யாழினிடத்திலே பிறவாத இசையென்று சொல்லுவேனோ? தாழ்ந்து தொங்கும் நீண்ட கூந்தலையுடைய பெண்ணே! நின்னையான் யாதென்று கூறுவேன்" என்று கூறிப் பலவாறு பாராட்டினான்.

இளங்காதலர்கள் இவ்விதம் சிலகாலம் மகிழ்ச்சியுடன் இன்ப வாழ்க்கையை இனிது நடத்திக்கொண்டிருந்தனர். அப்போது கோவலனுடைய தாய், கோவலனுங் கண்ணகியும் தனியேயிருந்து விருந்தினர்ப்பேணல் முதலிய நற்காரியங்களைப்புரிந்து இல்லற வாழ்க்கையை இனிது நடத்துதலைக்கண்டு மகிழவிரும்பினாள். தனியே ஓர் இல்லத்தை யேற்படுத்தி ஆங்கு வாழ்க்கைக்குரிய பொருள் முழுவதையும் அமைத்துக் கொடுத்தனள். கோவலனும்

கண்ணகியும் தனியே அந்த இல்லில் அமர்ந்து இல்லறத்தைக் களிப்புடன் நடத்தினார்கள். சில ஆண்டுகள் சென்றன.

## 3. மாதவி அரங்கேற்றம்

அக்காவிரிப்பூம் பட்டினத்திலே ஒரு கணிகை இருந்தாள். அவள் தேவகணிகையாகிய உருப்பசியினுடைய மரபிலே தோன்றியவள். அவள் அழகிலேயும் ஆடலிலேயும் பாடலிலேயும் மிகச் சிறந்தவள். அவளுடைய பெயர் மாதவி. அவளுடைய அழகு ஆடல் பாடல் முதலியவற்றை உலகிற்குக் காட்ட அவளுடைய ஆடல் ஆசிரியர்கள் முடிவு செய்தனர்.

### கூத்து அரங்கேற்றம்

ஆடலாசிரியன், இசையாசிரியன், இயற்றமிழாசிரியன், தண்ணுமையாசிரியன், குழலாசிரியன், யாழாசிரியன் ஆகியோர் ஒருங்கு கூடித் தகுதியான விடத்திலே சிற்ப நூல் முறைப்படி ஆடலரங்கேற்றுவதற்கு மண்டபம் அமைத்தனர். அரங்கேற்று மண்டபத்திற்கு வரவேண்டிய முறைப்படி மாதவி அரங்கேற்று மண்டபத்தை யடைந்தாள். ஆடலாசிரியர்கள் கற்பித்த கூத்து நூல் முறைப்படி ஆடல் பாடல் நிகழ்த்தினாள் மாதவி. அவையோர் களிப்படைந்தனர்.

மாதவியின் கூத்தால் மன்னன் உள்ளம் மகிழ்ச்சி மிக்கெய்தியது. அவன் தன்னுடைய பச்சை மாலையையும் தலைக்கோற் பட்டத்தையும் மாதவிக் களித்த

துடன், ஆயிரத்தெட்டுக் கழஞ்சு பொன்னுங்கொடுத்துச் சிறப்புச் செய்தான். மாதவி, தான் மன்னன் இடமிருந்து பெற்ற மாலையை ஒரு தாதியின் கையிற் கொடுத்து, அதன் விலை ஆயிரத்தெண் கழஞ்சு பொன்னெனவும்; அம்மாலையினை அவ்வளவு விலைகொடுத்தும்பெறுவோர் தனக்குக் காதலராக அமைதலுங் கூடுமெனவும், அனைவருக்கும் அறிக்கையிடச் செய்தாள். அத்தாதியும் அவ்விதமே அந் நகரத்திளைஞர்கள் சுற்றித்திரியும் தெருவிற்குக் கொண்டு சென்று விலை பகர்ந்தாள்.

### கோவலன் பரத்தையிற் பிரிவு

மாதவியின் ஆடல் பாடல்களால் அறிவு திரிந்து மனை சென்றிருந்த கோவலன் அச்செய்தியினையுணர்ந்து ஆங்கடைந்தான். அத்தாதி கூறியபடி பச்சை மாலைக்குரிய பைம் பொன்னைக் கொடுத்து அம்மாலையினை வாங்கினான். அத்தாதியுடனேயே மாதவி மனையை யடைந்தான். மாதவியின் மையலிலே படிந்தான். தன் மனையை மறந்தான். கண்ணகியையுந் துறந்தான்.

---

## 4. அந்திமாலையின் சிறப்பு

### நிலமகள் துன்பம்

விரிந்த ஒளியைப்பரப்பி உலகம் முழுவதையும் ஆட்சிபுரிந்த திண்மையாளனாகிய பகலோனைக் காண்கின்றிலேன். அழகிய இடத்தையுடைய விண்ணின் கண் தண்ணிய நிலாவைப் பரப்பும் திங்களாகிய செல்வன் எங்குளான்? என்று திக்காகிய தன்னுடைய

முகங்கள் பசப்பூர்தலைப்பெற்றும்; செம்மையை யுடைய மலராகிய கண்கள் முழுவதும் கள்ளாகிய நீர்ததும் புதலைப்பெற்றும்; உடலாகிய பூமியிடமெல் லாம் குளிர்ந்தும்; கடலை ஆடையாக வுடுத்தியுள்ள நில மடந்தை யானவள் தன்னுடைய தலைவனாகிய பகலோனையும் மைந்தனாகிய திங்களினையுங்காணாது இடுக்கண்ணெய்தியிருந்தாள்.

## மாலைக்கால வரவு

அப்போது நற்குடிகள் தொல்லையினை யெய்தும் படி; கொடுங்குடிகள் சிலரைத் தமக்குப் பற்றுக்கோ டாகப் பற்றிப் பேரரசர் இல்லாத காலத்தைப் பார்த் திருந்து அவருடைய இடங்களை யெல்லாம் தமதாகப் பற்றிக்கொள்ளும் சிற்றரசர்களைப் போல மாலைக் காலம் வந்தது.

## மாலைக்கால மாட்சி

கோவலர்கள் ஆம்பற்குழலினை வாய்வைத் தூதினர். இளமையையுடைய வண்டுகள் முல்லை மலரிலே வாய்வைத்தூதின. வண்டுகளாகிய குறும்பினைப் போக்கி மலர்கள் கட்டவிழ்ந்தன. அரும் புகளினிடத்தே யடங்கியிருந்த மணத்தினை இளந் தென்றலாகிய செல்வன் வாரித் தெருவெல்லாம் தூற் றினன். ஒளிதங்கிய வளையல்களை யணிந்துள்ள மகளிர். அழகிய விளக்குகளை யேற்றினர்.

இளந்தன்மையினை யுடையவராயினும் பகைவ யரசர்களை விரட்ட வல்ல போர்மாட்சியினை யுடைய வர், பாண்டியர் குலத்தினர். அக்குலத்திற்கு முன்னோ னாதலின் மாலைக்காலத்திலே செவ்வானத்தின் கண்

தோன்றிய இளவெண் பிறைச் செல்வனும் மாலைக் காலமாகிய தன் மாற்றானை விரட்டித் தன்னரசைச் செலுத்தினான். கொழுநரைப் பிரிந்துள்ள கோதையர் அனைவரும் கொடுந்துயர் அடைந்தனர். தலைவரைப்பிரியாது பொருந்தியுள்ள தையலர் அனைவரும் தனிமகிழ்வடைந்தனர்.

மனையினிடத்தே வளர்க்கப் பெறும் மல்லிகை முல்லை முதலிய பலவற்றின் மலர்கள் பரவப்பெற்றது பள்ளியிடம். அப்பள்ளியிடத்தே மேகலையைசந் தொலிக்க; நிலவின் இனிய பயனை அனுபவித்தற் கமைக்கப் பெற்ற நீண்ட பெரிய நிலா முற்றத்திடத்திலே, கூடலையும் ஊடலையும்கோவலற்குக் கொடுத்து நின்றாள் மாதவி.

காதலனைப் பிரிந்திருந்த கண்ணகியோ மிகவருந்தியிருந்தாள். அவளது அழகிய அடிகளிலே அணியப் பெறுஞ் சிலம்புகள் அணிதலைப் பெறாது கிடந்தன. மேகலை மேவலை விட்டன. திங்களைப் போன்ற திருமுகத்திடத்தே சிறுவியர்வில்லை. செவ்விய கயல் போன்ற கண்கள் மையணியை மறந்தன. ஒள்ளிய திருநுதல் பொட்டினையிழந்தது. கரிய கூந்தலோ நெய் பூசி வாரிப் பின்னுதல் முதலிய அணிகளை மறந்தது. மங்கலவணியாகிய தாலியைத் தவிர மற்றைய அணிகலன்களைத் துறந்தாள். இவ்விதமாக எவ்வித ஒப்பனையையும் மறந்து நின்ற கண்ணகி ஏதுஞ் செய்தற்கு ஆற்றாதவளாய் இருந்தாள். பிரிவுத்துயர் அவளைப் பெரிதும் வருத்தியது. கணவனைப் பிரிந்துள்ள இக் கண்ணகியே யன்றிக் கணவரைப் பிரிந்துள்ள பெண்ணின் நல்லார் அனைவருமே இவ்விதம் பேதுற்று நின்றனர். அவர்கள் விடும் மூச்சுக்காற்றானது உலை

யின்கண் ஊதப்பெறுகிற துருத்தியின் மூக்குக் காற்றைப் போல விளங்கியது.

பிரிதற்றுன்புடையார் அனைவரும் இளவேனிற் காலத்திற்கு அமைக்கப்பெற்றநிலாமுன்றிலையுடையாராய் இடைமாடத்தே அமர்ந்திருந்தனர். தென்றலும் நிலவும் சிறிதும் உட்புகாவண்ணம் சாளரவாயில்களையெல்லாம் சாற்றிக்கொண்டனர். முத்துமாலை முதலிய அணிகலன்களை விரும்பாராயினர். குவளை செங்கழுநீர் முதலிய பூக்கள் சேக்கையிற் பொருந்தவும் அவர்கள் விடவில்லை. அவர்களுடைய கண்களும் துயிலைத்துறந்தன. பறவைகளின் ஒலியாகிய முரசுடனே புள்ளிகள் பொருந்திய சிறகினை யுடைய சேவற்கோழியும் கூரிய வாயையுடைய சங்கும் முறைப்படியொலித்தன. கடல்போலும்பரப்பினையும் ஒலியினையும் உடைய அவ்வூர் துயிலும் ஒழிந்தது. இருள் நீங்கும் விடியற்காலம் வரை கள்ளிரவிலுங்கூட ஒருமாத்திரைப் போதுங் கண்துயிலாறுய்; மணம் பொருந்திய மலராகிய அம்பையும் கரும்பாகிய வில்லையும் ஏந்தி; மீனக்கொடியையுடைய வேள்லாருனவன் திரிந்து கொண்டிருந்ததால், அந்நகரம் மிகுந்த காவல் பொருந்தியதாக விருந்தது.

சேர்ந்தவர்பால் தண்மையுடையதாகியும், சேரார்பால் வெம்மையுடையதாகியும்; மன்னனது வெண்கொற்றக் குடையைப்போல; இராக்காலத்திலே வானின்கண் ஒளிவிரித்துச் செல்லும் திங்கள் கூடியமாதவிக்கும் கூடாத கண்ணகிக்கும் முறையே தண்மையும் வெம்மையும் உடையதாக விளங்கிற்று.

# 5. இந்திர விழா

நிலமடந்தை அலைகடலை ஆடையாக வுடையவள். மலைகளைக் கொங்கைகளாக வுடையவள். மலையில் இருந்து இழியும் அருவிகளை முத்துமாலைகளாக வுடையவள். கரிய முகிலினைக் கூந்தலாக வுடையவள். அந் நிலமடந்தையின் உடலை மூடியுள்ள இருளாகிய ஆடையினை நீக்குமாறு ஒளியினையுடைய ஞாயிறுனவன், தான் புறப்படும் மலையின் உச்சியிலே தோன்றி ஒளியைப் பரப்பினன்.

## மருவூர்ப் பாக்கம்

நிலா முற்றமும் அணிகலன் வைக்கப்பெற்ற அறைகளும், மாளிகையிடங்களும், சோனகர் இருப்பிடங்களும், பிறநாட்டார் பலரும் ஒருநாட்டாரைப்போலக் கலந்துறைந்திருக்கும் கடற்கரை இருப்பிடங்களும், தூய நறுமணத்தையுடைய பொருள்களைத் திரிந்து விற்கும் தெருக்களும், பட்டுநூலாலும், மயிராலும் பருத்திநூலாலும் நுண்ணிய வேலைப்பாடுகளைச் செய்யும் சாலியர் இருப்பிடங்களும், பட்டும் பவழமும் சந்தனமும் அகிலும் முத்தும் மற்றுமுள்ள மணிகளும் பொன்னும் ஆகிய இவைகள் இவ்வளவென்று அளந்தறியப்பெருத பல வளங்களும் மிகப்பொருந்திய அகன்ற கடைத்தெருக்களும், ஒன்பது வகையாகப் பகுக்கப்பெற்ற கூலங்களை விற்கும் கூலவீதிகளையும், பிட்டுவாணிகர்களையும், அப்ப வாணிகர்களையும், கள் வாணிகர்களையும், மீன்வாணிகர்களாகிய பரதவர்களையும், உப்புவிற்போர்களையும், வெற்றிலை விற்போர்களையும், எண்ணெய் வாணிகர்களையும், ஆட்டின்தசைகளை

விற்கும் ஊன் வாணிகர்களையும், வெண்கலக் கன்னார்
களையும், செப்புவேலை செய்பவர்களையும், மரவேலை
செய்யும் தச்சர்களையும், இரும்புவேலை செய்யும்
கொல்லர்களையும், ஓவியக்காரர்களையும்,பொம்மைகள்
புனைவார்களையும், பொற் கொல்லர்களாகிய தட்டார்
களையும், இரத்தினக்கொல்லர்களையும், தையல்காரர்
களையும், தோலால் தையல் வேலைசெய்யும் செம்மார்
களையும், மற்றும் பலவேலைகளைச் செய்வோர்களையும்
கொண்டது மருவூர்ப் பாக்கம்.

## பட்டினப்பாக்கம்

பாதுகாப்புப் பொருந்திய மன்னனுடைய மாடம்
அமைந்த இராச வீதியும், தேர்வீதியும்,கடைவீதியும்,
பெருங்குடி வாணிகர்களின் இல்லங்கள் அமைந்த
வணிகவீதியும், மறைகளை யுணர்ந்த பார்ப்பார் வாழும்
பார்ப்பன வீதியும், பயிர்த்தொழில் புரியும் வேளாளர்
வாழும் வேளாளர்வீதியும்,மக்களின் நோயைப் போக்
கும் மருத்துவர் வாழும் மருத்துவர்வீதியும்,காலபலன்
உரைப்போராகிய காலக் கணிதர் தத்தம் முறைப்படி
இருக்கும் இருப்பிடங்களும், முத்துக் கோப்போரும்,
மணிகளைத் தூய்மை செய்வோரும், அழகிய வளையல்
களை யறுப்போரும் இருக்கும் பெரிய வீதிகளும், அர
சர்கட்கு முன்பு நின்று அவர்களைப் போற்றும் மாக
தர், அரசர்களது புகழைப்பாடும் வைதாளிகர், நாழி
கைக்கணக்குச் சொல்லும் நாழிகைகணக்கர்,சாந்திக்
கூத்தர், விலைமகளிர், கூத்தாடும் கூத்தியர், குற்றேவல்
மகளிர், தோற் கருவி துளைக்கருவி நரம்புக்கருவி
கஞ்சக் கருவி முதலியவற்றை வாசிக்கும் குயிலுவர்,
போருக்கும் திருவிழாவுக்கும் பறை கொட்டுவோர்,

நகையுண்டாக்கும் விகடக்காரர்கள், குதிரைப் பாகர்கள், யானைப்பாகர்கள், தேர்ப்பாகர்கள், காலாட் படைத்தலைவர்கள் ஆகியவர்கள் இருக்கும் இருப்பிடங்களும் பொருந்தியது பட்டினப் பாக்கமாகும்.

## நாள் அங்காடி.

மேற் கூறப்பெற்ற மருவூர் பாக்கத்திற்கும் பட்டினப் பாக்கத்திற்கும், நடுவேயுள்ளது 'நாள்அங்காடி என்னும் காலைக்கடைத்தெரு. இரண்டு பெரிய அரசர்கள் போர்செய்யும் போர்களத்தைபோல, இக்காலைக் கடைத்தெருவிலே விற்போர் ஒலியும் வாங்குவோர் ஒலியும் நிறைந்திருக்கும்.

## காவல் பூதம்

இந் நாளங்காடியிலே ஒரு பூதத்தின் பலிபீடம் இருக்கின்றது. வெற்றி வேலையுடைய முசுகுந்தச் சக்கிரவர்த்திக்கு நேர்ந்த இடையூற்றைக் கெடுக்குமாறு தேவர் தலைவனாலே அனுப்பப் பெற்று இவ்வுலகத்தை யடைந்த பூதம் தங்கிப்பலிபெறுவது, இந்தப்பலிபீடத்தின் இடத்திலே தான்.

## பலி

இந்தப்பலிபீடத்தின் முன்பு, வேகவைக்கப் பெற்ற புழுக்கல்களையும், எள்ளுருண்டையினையும், ஊனுடன் கூடிய சோற்றையும், பூவினையும், புகையினையும் பொங்கற் சோற்றினையும் மறக்குலப் பெண்கள் கொண்டுவந்துசொரிந்தனர்; துணங்கைக் கூத்தினையும் குரவைக் கூத்தினையும் தெய்வமேறப்பெற்றுஆடினர். எம் அரசனுடைய பெரிய நிலம் முழுவதும் பசியும் பிணியும் பகையும் நீங்கி மழையும் வளமும் உண்டாக வென வாழ்த்திச் சென்றனர்.

மருவூர்ப் பாக்கத்திலுள்ள வீரர்களும் பட்டினப் பாக்கத்திலுள்ள வீரர்களும் ஒருவருக்கொருவர் முற்படச்சென்றனர்; மிகுந்த வெற்றியினை யுடைய எம்மரசற்கு நேரிடும் இடையூற்றை யொழித்து வெற்றி தருகவெனத் தம்மைப் பலியாகக் கொடுத்தவர்களின் வலிமைக்கு எல்லையாகும்படி வஞ்சினங் கூறினர். கல்வீசுங் கவணுடையாராய், ஊன் பொருந்திய கருந்தோலாற் செய்யப் பெற்ற பரிசையுடன் பல வேலினை யுடையாராய்த்தோளினைத்தட்டி ஆரவாரஞ் செய்து வேந்தன் போர்க்களத்திடத்திலே வெற்றியடைக வென்று தம்முடைய கருந்தலையை நல்லபலிப் பீடிகையிலே நன்றே பொருந்தவைத்தனர். அப்பூதத்திற்குத் தமது உயிரைப் பலியிட்டனர்.

## கரிகாலன் இமயத்திற் குறிபொறித்தல்

பெரிய பூமியிடத்திலே தன்னையெதிர்த்துப் போர் செய்வாரைப் பெறாத கரிகாற்சோழன் போரிலே மிகுந்த விருப்ப முடையவன். தன்னுட்டிலே தனக்கொரு பகைவரும் இன்மையானே, வட நாட்டிலேனும் பகைவரைப் பெறலாமெனக் கருதி அந் நாட்டை நோக்கிப் புறப்பட்டான். அப்போது இமய மலை குறுக்கிட்டு அவன் அப்பாற் செல்லாத வண்ணம் தடுத்தது. எனவே அவன் அம்மலையினிடத்தே தனது புலிக்கொடியைப் பொறித்துவிட்டு மீண்டான்.

## சித்திர மண்டபம்

மீளுங்காலை, கடலை வேலியாகவுடையதும், சோணையாற்றங்கரையி லுள்ளதுமாகிய வச்சிர நாட்டின் அரசன் முத்துப் பந்தரினைத் திறையாகக் கொடுத்தான். வாட்போரில் வல்லவனாகிய மகத

நாட்டு மன்னன் பகையுடன் பொருது திறையாக இறுதியில் பட்டி மண்டபம் கொடுத்தான். அவந்தி நாட்டரசன் மகிழ்ச்சியுடனே உயர்ந்த வேலைப்பாடமைந்த வாயில் தோரணம் கொடுத்தான். இவைகள் பொன்னாலும் மணியாலும் செய்யப்பெற்றன வாயினும், தொழிலிலே வல்ல மானிடத் தச்சர்களாற் செய்யப்பெறாதன. இவை மூன்றும் இவர்களுடைய முன்னோர்கள் செய்த உதவிக்குக் கைம்மாறாகத் தெய்வத்த சனால் செய்துகொடுக்கப் பெற்ற சிறப்பையுடையன. வெவ்வேறு நாட்டன வாகிய இவைகள் ஒரு நாட்டில் ஓர் ஊரில் ஓர் இடத்தில் ஒருங்கு சேரப்பெற்று உயர்ந்தோரால் ஏத்தப் பெறும் அரிய தன்மையையுடையது சித்திர மண்டபம்.

## வெள்ளிடை மன்றம்

புதியோரின் பெயர் எழுதிய அடையாள எழுத்தினைக் குறியாக அமைத்த பலவாகிய பொதிகள் காப்போரின்றிக் கிடக்கின்றனவென்று, அவற்றைக் களவு செய்வோர் உளராயின், அவர் தலைவருந்துமாறு அப்பொதியினை அவர் தலையில் வைத்து ஊரைச் சுற்றுவிப்பதன்றி, அவருக்கு அப்பொருளினைக் கொடுத்துவிடாத தன்மையானே நினைந்தோரையும் நடுங்கச்செய்யும் இயல்பையுடையது வெள்ளிடைமன்றம்.

## பொய்கை மன்றம்

கூனர்கள், குள்ளர்கள், ஊமர்கள், செவிடர்கள், தொழுநோயால் அழுகிய உடம்பை யுடையவர்கள், ஆகியோர் மூழ்கி நீராடிய அளவில் தம் ஊனங்கள்

நீங்கப் பெற்று நல்ல வடிவத்தையடைந்து வலஞ் செய்து தொழுது நீங்கும் தன்மையையுடைய பொய்கையைத் தன்னகத்தே கொண்டது பொய்கை மன்றம்.

## நெடுங்கல் மன்றம்

பகைவரின் வஞ்சனையால் பித்தேற்றும் மருந்தினையுண்டு பித்தராயினோரும், நஞ்சினையுண்டு நடுங்கும்படியான துயரத்தினை யடைந்தவரும், பாம்பினாற் கடியுண்டவரும், பேயாற் பிடியுண்டவரும் சூழ்ந்துவந்து தொழுத அளவில்லை, அத்துயர் நீங்குதற்குக் காரணமாகிய ஒளிபொருந்திய நெடிய கல்லையுடையது நெடுங்கல் மன்றம்.

## பூத சதுக்கம்

தவக்கோலத்தில் மறைந்து நின்று கூடாவொழுக்கத்திலே ஒழுகுந் தவத்தன்மையில்லாதவரும், கள்ளத்தனமான வொழுக்கத்தை மேற்கொண்டுள்ள தீநெறிப் பெண்டிரும், அரசனுக்குக் கேடு சூழும் அமைச்சரும், பிறன் மனைவியை விரும்பும் பேதையரும், பொய்ச்சான்று புகலும் பொல்லாதவரும், புறங்கூறும் புல்லறிவாளரும், ஆகிய இவர்களெல்லாரும் என் கையகத்ததாகிய வலிந்திழுக்குங் கயிற்றினிடத்திலே சிக்குவர், என்று நான்கு காதம் வரையில் கேட்கும்படியாகக் கடுமையான குரலையெழுப்பி அறிவு புகட்டியும், தெளியாதாரைத் தன் கைக் கயிற்றால் வலிந்திழுத் துண்ணும் பூதம் நிற்குமிடம் பூத சதுக்கம்.

## பாவை மன்றம்

அரசனது செங்கோல் கொடுங்கோலாக மாறி னும், அறங்கூறும் அவையத்தார் கூறும் நடுவு நிலைமை அறநூன் முறைக்கு மாறுபட்டு ஒரு பக்க மாக விருப்பினும் நாவாற் கூறுமல்; துன்பக் கண்ணீர் சொரிந்து பாவையானது நின்று அழும் இடம் பாவை மன்றம்.

## கொடியேற்றம்

உண்மைப்பொருளை உணர்ந்த சீரியோரால் போற்றப்பெறும் மேற்கூறிய ஐவகையாய மன்றத் திடத்தும் அரியபலியை இடுவோர் இட்டனர். இந்திரனது வச்சிராயுதம் உள்ள கோயிலின் கண்ணேயிருந்த மங்கல முரசை யானையின் பிடரி யிலே ஏற்றினர். இந்திரனது ஊர்தியாகிய வெள் ளானையின் கோயிலுக்குச் சென்று விழாவின் தொடக்கமும் முடிவும் சாற்றினர். கற்பகதருவின் கோவிலுக்குச்சென்று எண்வகை மங்கலமும் இயைந்த கொடியை வானளாவும்படி ஏற்றினர்.

## முன்றில் சிறப்புக்கள்

நகரத்தின் மாளிகைகள் மரகதமணியும் வயிர மும் பதிக்கப்பெற்றவை. செம்பவளத்தூண்கள் நிறுத்தப் பெற்றவை. மாளிகைகளின் வாயில்களெல் லாம் எண்வகை மங்கலங்களையும் எழுதப் பெற்ற தோரணங்கள் தொங்கின. பசும்பொன்னாற் செய்யப் பெற்ற நிறைகுடமும், விளக்கம் பொருந்திய முளைக்குடங்களும், பாவை விளக்குகளும், பசும் பொன்னாலாகிய கொடிகளும், வெண் சாமரையும்

அழகிய கொடிகளுடனே தெருவிடங்களெல்லாம் நெருங்கப் பெற்றன. அமைச்சர், புரோகிதர், சேனுபதியர், தூதுவர், சாரணர் என்று கூறப்பெறும் அரசனுடைய ஐம்பெருங் கூட்டத்தினரும், அரச குமாரர்களும் வணிக குமாரர்களும், யானை வீரர் களும் குதிரைவீரர்களும் குதிரை பூட்டிய தேர் வீரர்களும் ஒன்று கூடித் திரண்டனர். தங்களுடைய அரசனை மேன்மைப் படுத்தும்பொருட்டு அவ்வூரின் கண்ணே சீர்த்தி மிகுந்த வேந்தன் வெற்றியடைக என்று வாழ்த்தினர்.

## விண்ணவர் தலைவனை விழுநீராட்டல்

இப் பெரிய பூமியின் கண்ணே மிகுந்த உயிர் களைக் காக்கும் ஆயிரத்தெட்டு அரசர்களின் தலையிற் கொண்டு வரப் பெற்ற காவிரி சங்கம நீரைப் பொற் குடத்தில் இட்டனர். மண்ணக மாந்தர் மருட்சி யடையவும் விண்ணகத் தேவர் வியப்படையவும் விண்ணக வேந்தனைத் திருமுழுக் காட்டினர்.

## கோயில்களில் வேள்வி

சிவன் கோயிலிலும், முருகன் கோயிலிலும், திருமால் கோயிலிலும், பலதேவன் கோயிலிலும், தேவர் கோமான் கோயிலிலும் நான் மறை முறைப் படி நல்வேள்விகள் நடைபெற்றன.

## தேவர்கட்கு விழா

எட்டு வசுக்கள், பன்னிருஞாயிறுகள், பதினொரு உருத்திரர்கள், இரண்டு மருத்துவர்கள் ஆகிய முப் பத்து மூன்று தேவர்களுக்கும் ஒவ்வோரிடத்தில் விழா நிகழ்ந்தது.

## அறவோர் அறவுரை

அருகர் புத்தர் பள்ளிகளிலும், அறச் சாலைகளிலும், மதிலின் புறத்தேயுள்ள நல்லிடங்களிலும், அறத்தின் தன்மையை இனி துணர்ந்தோரின் நல்லுரைகள் சிறந்தோங்கின.

## பகைவரைச் சிறை நீக்கல்

அரசன் தன்னுடைய பகைவர்களைச் சிறையில் நின்றும் விடுவித்து, ஒரு பக்கம் தன்னுடைய பெருந் தன்மையைப் புலப்படுத்தினான்.

## களியாட்டம்

கூத்தரும் குழலரும் தோற்கருவியாளரும் யாழ்ப் புலவரும் பாடலில் வல்ல பாணரும் ஆகிய இவர்களுடைய ஆடல் பாடல்களும் நிகழ்ந்தன. இரவும் பகலும் இவ்விதம் விழா நடத்தலானே முழவின் ஒலிகள் அடங்குதலின்றிச் சிறு தெருக்களும் பெருந் தெருக்களும் திருவிழாவினால் மிகுந்த களிப்பை யடைந்தன.

## பலவகைச் சிறப்புக்கள்

காதற் கொழுநனாகிய கோவலனைப் பிரிந்து அலர் எய்தாது களி சிறந்திருந்தாள் மாதவி. இல்லத்தின் கண்ணே வளரா நின்ற முல்லையும் மல்லிகையும் இருவாட்சியும் தாழியுள் மலர்ந்த குவளையும் செங்கழுநீரும் ஆகிய மலர்கள் பிணையலால் விளக்கமுற்று அம் மாதவியைப் போல் பொலிவுபெற்றிருந்தன. நகரின் சிறிய தெருக்களிலும் மலர்மண மேறிய இளந் தென்றற் காற்று இனிது வீசித் திரிந்தது. மலையக் காற்று காமக் களி மகிழ் வெய்திய காதலரைப் போன்று மலர் செறிந்த நறுமணச் சேக்கை

களிலே ஆடிநின்றது. காலைக் கடைத் தெருவிலே விற்பனையாகும் மலர்க்குவியல்களின் புது மணத்தில் புகுந்தது. புகையும் சந்தனமும் புலராது சிறந்து நகையாடிக் கொண்டிருக்கும் நங்கையர் கூட்டத்திலே நுழைந்து அவர்தம் இனிய மொழிகளை இனிது நுகருகின்றது. பாடகருடனும் காமக் கள்வருடனும் திரியும் கோவலனைப் போலச், சுருதி பாடும் வண்டுடனும் இளவேனிலுடனும் மலயக் காற்றுத் திரிகின்றது. மலர் மணங் கமழும் தெருக்களிற் பரத்தையர் திரிகின்றனர். அவர்கள் எவ்வாறு திரிகின்றனர் எனின், விண்ணகத்துலாவும் திங்கள், இராகுவாய தன் பகைவனுக் கஞ்சிக் கரிய முகிலைச் சுமந்து, சிறு முயலை யொழித்து இருகருங் கயல்களுடன் இடையே மூக்கும் அமைக்கப் பட்டு இந் நிலவுலகிலே வந்து திரிகின்றதோ? இறைவனால் எரிக்கப்பட்ட உடல் மீளவே கயற்கொடியினையுடைய காமவேள் திங்கண் மண்டலத்தின் அமுத நீரை யூற்றி வளர்த்த மின்னற் கொடிதான் இங்கு இறங்கி வந்ததோ? பெரிய நிலத்தினையுடைய கரிகாற் சோழனுக்குத் தனது அரிய வளப்பத்தினைக் காட்டவேண்டித் திருமகள் வந்திருப்பது இச் சீர்கெழு நகராமெனக் கருதிச் செந்நிறத்தினையுடைய இலவம் பூ (வாய்) முல்லை (பல்) கருநெடுங்குவளை (கண்) குமிழ் மூக்கு ஆகிய இம் மலர்களைப் பூத்து, மாறு வடிவத்தினையுடைய தாமரை மலர் (முகம்) தான் வந்து திரிகின்றதோ? பலவுயிரையும் பருகும் திறந்தவாயினையுடைய கூற்றம் கரிகால் மன்னனது செங்கோலுக் கஞ்சி ஆணியல்பு மாறுபட்டுத் தனது கொலைத் தொழில் மட்டும் வேறுபடாது நாண் தாங்கிய கோலத்தையும் கைதங்கிய

முகத்தையும் உண்டாக்கிக்கொண்டு இனிய மொழி யைப் பேசிப் பெண் போலத் திரிகின்றதோ? என்று கண்டோர் எண்ணும் வண்ணம் திரிகின்றனர்.

## உடல் நோய்க்கு மருந்து

விலைமகளிர் காம மன்னனின் படையாவர். தெரு வில் செல்லும் ஆடவர்களைக் கூட்டத்தின் மிகுதியால் இவர்கள் நெருக்கித் தழுவினர்; அதனால் விலைமகளிர் மார்பிலெழுதப்பட்டிருந்த தொய்யில் ஆடவர்கள்மார பில் பதியலாயிற்று. அத்தொய்யில் பதிவால் தம் மனை வியர் ஊடல் கொள்ளுவர் என்பதனை ஆடவர்கள் அறிகின்றனர். அவ்வூடலைப் போக்கற்கு விருந்தே உறு துணையென்பதனையும் அவர்கள் உணர்கின்றனர். எனவே அவர்கள் விருந்தையும் உடனழைத்துக் கொண்டு இல்லம் எய்துகின்றனர். விருந்தால் அல்லல் அகல்கின்றது. அவர்தம் மனைவியர் விருந்தினர் வருகைக்குப் பெரிதும் உவந்தனராய் இருவரையும் பெரிதும் போற்றுகின்றனர். அம்மனைவியரின் முகக் குறியைக் காணும் ஆடவர் இவ்விருந்தினர் உடன் வாராராயின் அவர்தம் ஊடலுக்கு மருந்துமுண்டோ? ஊடல் நோய்க்கு மருந்து விருந்தேயாமென்றுணர்ந்து நடுங்குகின்றனர்.

உள்ளே நறுமணத் தாதுஉறைந்து இதழ்அவிழ்ந்து கள் பொழிய நடுங்கும் கழுநீர் மலரைப் போல, இந்திர விழாவன்று கண்ணகியின் கருவிழிகள் உள்ளத் துயரை மறைத்துக் கண்ணீர் உகுத்தன. மாதவியின் செவ்விழிகளோ இன்பக் கண்ணீர் உகுத் தன. ஆயினும் என்? கண்ணகிக்கு இடக்கண் துடித் தது. மாதவிக்கோ வலக்கண் துடித்தது.

# 6. கடலாடுதல்

வெள்ளிமலையில் சேடி என்னும் பெயரையுடைய வித்தியாதரர் நகரமொன்றுள்ளது. அதிலே ஒரு வித்தியாதர வீரனிருந்தான். தேனொழுக மலரும் பூக் களையுடைய பொழிலினிடத்தே அவன் தன் காதலி யுடன் காமக் கடவுளுக்குத் திருவிழாச் செய்பவன். அவன் தன் காதலியை நோக்கிக் கூறுகிறான்:—தென் திசைக்கண்ணே பூம்புகார் என்றொரு புகழ் மிகு நகர மிருக்கிறது. அந்நகரின்கண்ணே தேவர் கோமா னுக்குத் திருவிழாச் செய்யும் நாள் இன்றாகும். முசு குந்த மன்னன் புலியைப்போன்று போர்வலியுடைய வன். ஒரு காலத்தில் அவன் விண்ணவர் தலைவனின் நகரைக் காத்தான். மிகுந்த ஆற்றலுடன் கூடித் தன்னையெதிர்த்த அவுணர் கூட்டத்தை அழித்தான். உள்ளத்தை மருட்டும் ஒரு கணையை முசுகுந்தன்மேல் செலுத்தினர் அசுரர். ஒரு பெரிய பூதம் மந்திரம் ஒன்றை உதவியது. அவ்வுதவியால் முசுகுந்தன் அசுரர் விட்ட மயக்கக்கணையின் ஆற்றலை வென்றான். இதனை யறிந்த விண்ணவர்தலைவன் அப்பூதத்தை முசுகுந்த னுக்கே மெய் காவலாகக் கொடுத்தான். அப்பூதம் முசுகுந்தனுடன் பூம்புகாரில் தங்கிப் பலியேற்றுக் கொண்டிருக்கிறது. அந்த இடத்தையும் நாம் பார்ப் போம்.

அமராபதியைக் காத்தமைக்காகத் தேவர்கோமா னிடமிருந்து பெற்று இங்கே கொணர்ந்து பூமியில் வைக்கப் பெற்ற ஐவகைப்பட்ட வியத்தகு மன்றங் கள் அவ்வூரிலே உள்ளன. அந்த ஐவகை மன்றத் தின் பெருமையையும் நாம் பார்ப்போம்.

## ஊர்வசிக்குச் சாபம்

"ஒரு காலத்தில் நாரத முனிவர், தேவர் கோமான் பேரவையில் வீணையின்பம் விளங்கப் பாடினார். ஆடி முதிர்ந்த பேரிளம் பெண் வாரப் பாடல் பாடினாள். இவைகள் ஆயிரங்கண்ணனது செவியகம் நிறைந்தன. ஆயினும் ஊர்வசி கூத்தியற்றினாள் இல்லை. அவள் தன்னுள்ளத்தைச் சயந்தன்மேற் செலுத்தி நின்றாள். ஆதலின் நாரதர் வீணை இன்னிசை மங்கலத்தை இழந்தது. விண்ணவர் கோமான் ஊர்வசி மண்ணகத்தில் தோன்றுமாறு சாபம் ஈந்தனன். அவ்வாறே அவ்வூர்வசி பூம்புகாரில் மாதவியென்னும் பெயருடன் தோன்றினாள். அவளுடைய வழியிலே பிறந்த மாதவி என்பாளுடைய ஆடலையும் அவ்விடத்தே நாம் பார்ப்போம். அங்குச் செய்யப்பெறும் வழிபாட்டைக்கொள்ளும் தேவர் கோமானை நாமும் வணங்குவோம்" என்று கூறி; இமயமலையினையும் கங்கையாற்றினையும் உஞ்சை நகரத்தையும் விந்த மலைக் காட்டினையும் வேங்கடமலையினையும் சோணாட்டினையும் தன் காதலிக்குக் காட்டிக் காவிரிப்பூம் பட்டினத்தையடைந்து இந்திரனைத்தொழுது ஆங்குச் செய்யப்பெறும் இந்திர விழாச் சிறப்புக் காணலாயினன்.

திருமாலைப் பரவும் தேவபாணியும் வருணப்பூதர் நால்வரைப் பரவும் தேவபாணியும் திங்களைப் பரவும் தேவபாணியும் பாடப்பெற்றன.

'பின்னர் உமையவள் காண இறைவன் ஆடிய கொடு கொட்டி என்னும் ஆடலையும், பாண்டரங்க-

மென்னும் கூத்தையும், திருமால் ஆடிய அல்லியத் தொகுதி என்னுங் கூத்தையும், மற்கூத்தையும், முருகன் துடி கொட்டி யாடிய துடிக்கூத்தையும், குடைக்கூத்தையும், திருமால் குடங்கொண்டாடிய குடக்கூத்தையும், காமன் ஆடிய பேடிக்கூத்தையும், துர்க்கை மரக்கால் கொண்டு ஆடிய மரக்காற்-கூத்தையும், திருமகள் கொல்லிப்பாவை வடிவாய் ஆடிய பாவைக் கூத்தையும், இந்திராணி கடையியர் வடிவு கொண்டு ஆடிய கடையக்கூத்தையும், அவரவர்கட்குரிய வடிவங்கொண்டு மாதவி யாடினள். இவற்றை விஞ்சையன் தன் காதலிக்குக் காட்டினன். மேலும் "அவளே தான் முன்னர்க் கூறியபடி ஊர்வசி மரபில் வந்த மாதவி" என்றும் உரைத்தான்.

ஆடல் முடிவிலே பல் வகைப் பொருள்களால் மணமூட்டப் பெற்ற இனிய நெய்யினைக் கூந்தலுக்குப் பூசி நீராடினாள். புகையாற் கூந்தலை யுலர்த்தினாள். கத்தூரிக் குழம்பு முதலிய வாசனைப் பொருள்களை யணிந்தாள். செம்பஞ்சுக் குழம்பு ஊட்டப் பெற்ற சிவந்த சிறிய அடிகளிலே பல அணிகளைத் தரித்தாள். முத்தின் கோவை முப்பத்திரண்டால், ஆகிய விரி சிகை என்னும் அணியை நீலப்பட்டுடையின் மேலே பூண்டாள். அழகிய கண்டிகையுடன் சேர்த்துக் கட்டிய முத்தவளையைத் தோளுக் கணிந்தாள். முன்னிடத்திற் கட்டப்பெற்ற மாணிக்கத்துடன் பத்தி-களில் வயிரங்க ளழுத்தப்பெற்ற ஓவியத் தொழிலமைந்த வளையல்களை முன் கைகளிலே தரித்தாள். வாளை மீனின் திறந்த வாயைப் போற் செய்யப்பெற்றதும், செந்நிறவொளி மிகுந்து விளங்குவதுமாகிய கணை யாழியைக் காந்தள் மலர் போலும் கை விரல்கள்

முழுவதிலும் அணிந்தாள். வீரசங்கிலி, நுண்ணிய சங்கிலி, சரடு, சவடி, சரப்பளி முதலியவைகளை அழகிய கழுத்தினிடத்திலே முத்துமாலைகளோடு அணிந்தாள். விருப்பத்தை விளைவிக்கும் முத்திறுற் செய்யப்பெற்ற கோவையாகிய பின் தாலியால் பிடரியை மறைத்தாள்.

இந்திர நீலத்துடன் இடை இடையே திரண்ட வயிரத்தாற் கட்டப் பெற்று அழகு பெற்ற குதம்பை யைக் காதினிடத்திலே அழகுமிரும்படி அணிந்தாள். சீதேவி என்னும் தலையணியுடன் வலம்புரிச்சங்கு தொய்யகம் புல்லகம் என்பனதொடர்ந்து ஒன்றுன தலைக்கோலத்தைக் கரிய பெரிய கூந்தல் அழகுறும்படி யணிந்தாள். இவ்விதம் பலவிதமாகிய அணிகலன் களையும் பூண்டு பேரழகுடையவளாகிக் கூடலையும் ஊடலையும் கோவலற்குக் கொடுத்துநின்ற மாதவி கடல் விளையாட்டைக் காண விரும்பினுள்.

பொய்கைகளிலுள்ள தாமரைப்பூஞ்சேக்கையில் துயின்ற பறவைகள் வாய்விட்டுப் புலம்பின. விடி யற்கால மாகிவிட்டதென்பதனைக் கோழிகள் தமது குரலால் தெரிவித்தன. வெள்ளி தோன்றியதுல் உண்டாகிய விளக்கம், மிகுந்த இருளைப் போக்கிற்று. கோவலனும் மாதவியும் கடல் விளையாட்டுக் காணப் புறப்பட்டனர். குதிரையில் ஒரு பிரிவினதாகிய அத்திரி மீது கோவலன் ஏறினுன். மாதவி கொல்லாப் பண்டி என்னும் வண்டியி லேறினுள். பல வகை வளங்கள் மிகுந்த வீதிகளையெல்லாம் இருவருங் கடந்து கடற்கரையை யடைந்தனர். கடலினது புலால் நாற்றத்தைத் தமது மலரினுலே போக்கும் தாழைகளின் வேலியாற் சூழப்பெற்று உள்ளிடத்தே

இருந்த ஒரு புன்னை மரத்தின் நிழலிலே ஏற்படுத்தப் பெற்ற ஒரு திரை வீட்டிலே கோவலனும் மாதவியும் அமர்ந்தனர்.

## 7. கானல்வரி பாடுதல்

அப்போது மாதவியானவள் தன்னுடைய தோழியாகிய வசந்தமாலையின் கையிலிருந்த யாழைத் தொழுது வாங்கினாள். வாங்கியவள் பண்ணல் பரிவட்டனை ஆராய்தல் தைவரல் செலவு விளையாட்டுக் கையூழ் குறும்போக்கு என்று சொல்லப்பெற்ற எண் வகைக் கலைத்தொழிலாலும் இசையை எழுப்பினாள். மோதிரங்கள் செறிந்து அழகிய காந்தளிதழ் போன்றவையாகிய மெல்லிய விரல்கள் பாடுகின்ற வண்டின் கூட்டம்போலப் பலவாகிய நரம்பின்மீதே செல்ல வார்தல் வடித்தல் உந்தல் உறழ்தல் உருட்டல் தெருட்டல் அள்ளல் பட்டடை என்று கூறப்பெற்ற எட்டு வகை இசைக் கரணங்களாலும், உண்டாகும் இசையின் கூறுபாட்டைத் தன் செவியாலே சீர்தூக்கி யறிந்தாள். பின் அவ்வியாழினைக் கோவலன் கையிலே கொடுத்தாள். அவன் அவ்வியாழினை வாங்கிக் காவிரியைப் பற்றியனவும் கடற்கானலைப் பற்றியனவுமாகிய பாடல்களை மாதவியின் மனம் மகிழும்படி பாடலாயினான்.

திங்கள் மாலை வெண்குடையான்
சென்னி செங்கோ லதுவோச்சிக்
கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி

கங்கை தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மங்கை மாதர் பெருங்கற்பென்(று)
அறிந்தேன் வாழி காவேரி.
மன்னு மாலை வெண்குடையான்
வளையாச் செங்கோ லதுவோச்சிக்
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவாய் வாழி காவேரி
கன்னி தன்னைப் புணர்ந்தாலும்
புலவா தொழிதல் கயற்கண்ணாய்
மன்னு மாதர் பெருங்கற்பென்(று)
அறிந்தேன் வாழி காவேரி.
உழவ ரோதை மதகோதை
உடைநீ ரோதை தண்பதங்கொள்
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்தாய் வாழி காவேரி
விழவ ரோதை சிறந்தார்ப்ப
நடந்த வெல்லாம் வாய்காவா
மழவ ரோதை வளவன்றன்
வளனே வாழி காவேரி.

திங்கட் குடை யுடையவனாகிய சோழன் செங்கோலைச் செலுத்திக் கங்கை மங்கையைத் தழுவினாலும் நீ சோழனை வெறுத்தல் செய்யாய்; ஆதலின், காவிரியே, நீ வாழ்வாயாக. நீ அவ்விதம் வெறுத்தல் செய்யாதிருத்தல் மங்கைமார்கட் குரிய சிறந்த கற்பென் றறிந்தேன். ஆதலின், காவிரியே நீ வாழ்வாயாக.

நிலைபெற்ற வெண்கொற்றக் குடையையுடையவனாகிய சோழன் என்றும் வளையாத தன்னுடைய

செங்கோலைச் செலுத்திக் கன்னியைத் தழுவினாலும், காவிரியே, நீ வெறுத்தல் செய்யாய். அவ்விதம் நீ வெறுத்தல் செய்யாதிருத்தல் நிலைபெற்ற சீரிய கற்பினையுடைய பெண்களின் தன்மையென்று அறிந்தேன். ஆதலின் காவிரியே வாழ்வாயாக.

உழவர்கள் ஒலியும், நீர் மதகிலே செல்லும் ஒலியும், கரைகளையுடைத்துப் பாயும் நீர் ஒலியும், புதுநீர் விழாக் கொண்டாடும் ஆடவர் பெண்டிரின் பலவகையொலியும் மிகுந் தொலிக்கச் செல்கின்ற காவிரியே நீ வாழ்வாயாக. அவ்விதம் பல வகை யொலியும் நீங்கா தொலித்தற்கு உன் தலைவனாகிய கரிகால் வளவனுடைய பெருமையே காரணமாகும். காவிரியே வாழ்வாயாக.

கருங்குவளை மலரைப் போலும் நீண்ட கண்களையுடைய தலைவியின் முன், கடலின் தெய்வமாகிய வருணனைப் பலகாலும் சுட்டிக் கூறிய அரிய சூள் தப்பினரென்று, ஐயனே, ஏழையேமாகிய யாம் எவ்விதம் அறிவோம். விரிந்த கிரணங்களையுடைய திங்களும் விண் மீன் கூட்டமும் ஆகுமென்று மயங்கி வெண்ணிறமுடைய சங்கினையும் முத்தினையுங் கண்டு ஆம்பல் போதுகள் மலருகின்ற காவிரிப்பூம் பட்டினமே எம்முடைய ஊராகும்.

காதலையுடையவராய் அன்று கடற் கரைச் சோலையினிடத்திலே கையுறை கொண்டு எமது பின்னே வந்தவர் இன்று விருப்பு வெறுப்பு அற்றவராகி யாம் இரக்கும் வண்ணம் நிற்கின்றார். அவ்விதம் நிற்றலை ஏழையேமாகிய யாம் எவ்விதம் அறிவோம். மகளிருடைய முகத்திலுள்ள கண்ணையும் நீரிலே

தோன்றும் திங்களினது நிழலுக் கிணையாக மலர்ந்த நீல மலரையும் மாறுபாடறிய முடியாமல் வண்டுகள் ஊசலாடும் காவிரிப்பூம் பட்டினமே எம்முடைய ஊரர்கும்.

மோதுகின்ற பெரிய அலையாலே தாக்கப்பெற்று அசைந்து வந்த சங்கம், சிறுமியர் மணலின் மீது செய்த சிற்றில் முதலியவற்றை உழுது அழித்தது. அதனுல் அவர்கள் மயங்கித் தாம் அணிந்திருந்த மாலையினை அறுத்து அச் சங்கங்கள் அசைந்து செல்லும்படி மெல்லிய விரல்களால் வீசி யெறிந்ததிற் சிதறிய நீல மலர்கள் மாலைப் போதிலே கடைக் கணித்தாற் போலக் கிடப்ப, ஆங்குச் செல்வோர் கண்கள் அவற்றைக் கண்களோ என ஐயுற்று அப் பாற் செல்லாத காவிரிப்பூம் பட்டினமே எம்முடைய ஊராகும்.

கடலின் துறையிலே மேய்கின்ற வலம்புரிச் சங்குகள் மணலிலே ஊர்ந்து உழுத வடுக்கள் மறையும்படி புன்னை மரத்தின் மிகுந்த பூக்கள் உதிர்ந்து அவற்றின் நுண்ணிய தாதுக்கள் மறைக்கும் கானலிடத்தே இவளது நிறைந்த மதிபோலும் ஒள்ளிய முகத்தில் உள்ள கயற் கண்கள் செய்த, மருந்தாற் போக்கமுடியாத மிகுந்த நோயினைச் சுணங்கணிந்த மெல்லியதனங்கள் போக்கும் போலும்.

நிணம் பொருந்திய புலால் வற்றல் காய்வதன் பக்கத்தில் நின்று, பறவைகளை யோட்டும்பொருட்டுக் கூட்டமாகிய வண்டுகள் முரன்று திரியும் நல்ல புலி நகக்கொன்றையின் பூங்கொத்தைக் கையிலேந்திக் கானலிடத்தே ஒரு தெய்வம் உறையுமென்பதை அறியேன். அறிவேனுயின் ஆண்டுச் செல்லேன்.

வலையிறைலே வாழ்பவருடைய சேரியிலே; வலை காயப்பெறும் முற்றத்திலே; மலர்க்கொம்பைக் கையில் பிடித்து; விற்றலுக்குரிய மீன்வற்றல் காய்தல் பொருட்டாக விரும்பிய வடிவத்தை மேற்கொண்டு கொலைத் தன்மையமைந்த வேறொரு கூற்றம் வாழ்தலைக் கானலிடத்தே யான் அறியேன். அறிவேனாயின் ஆண்டுச் செல்லேன்.

கண்ணெனக் கயலையும், புருவமென வில்லையும், கூந்தலெனக் கரிய மேகத்தையும், பிறரை வருத்துந் தொழிலையும் எழுதிய மறுவற்ற முகம் திங்களோ காணீர். திமிலால் வாழ்பவருடைய சிறிய ஊரின்கண் வானத் தரவுக்கு அஞ்சி வந்து உறையும் திங்களோ காணீர்.

அலையால் எறியப்பெறும் சங்குகள் முழங்க அதற்கு அஞ்சி இரண்டு பக்கத்திலும் ஓடும் கறை பொருந்திய வேல் போன்ற கண்ணையுடையாள் கொடிய கூற்றமோ பாரீர். கடல் வளத்தால் வாழ்பவருடைய சிறிய ஊரிலே மடப்பம்பொருந்திய மிக்க மென்மையையுடைய மகளாகிய தான் கடிய கூற்றமோ பாரீர்.

வெள்ளிய மீன்வற்றலைக் கவரவரும் புள்ளினை யோட்டிக் கண்டார்க்கு வருத்தத்தைச் செய்யும் அணங்கு இதுவோ காணீர். அடும்பின் மலர்கள் பொருந்திய குளிர்ந்த கானலிலே மெல்லியகூந்தலையுடைய ஒரு பெண்வடிவு கொண்ட அணங்கு இதுவோ காணீர்.

பொழிலால் தரப்படும் நல்ல மலரும், புதிய மணம் பரந்த மணலும், அங்கு நின்றவருடைய குற்றமற்ற, இனிய மொழியும், முழுமதிபோலும் முகமும், வளைந்த

இரண்டு புருவமாகிய வில்லும், எழுதுதற்கரிய மின் போன்ற இடையும் என்னைத் துன்புறுத்தியவைக ளாகும்.

அலைகள் மிகுந்த நீர்த்துறையும், அழகிய மணல் பரந்த இடமும், மணம் விரிந்த நறிய மலரும், தருக்கள் நெருங்கிய சோலையினிடமும், மணம் பரந்த சுருண்ட கூந்தலும், திங்களை யொத்த அழகிய முகமும், இரண்டு கயல்மீன்களை யொத்த இரண்டு விழிகளும் என்னைத் துன்புறுத்தியவைக ளாகும்.

சங்குகள் வளரும் துறையும், மணம் பரந்த சோலையும் கட்டவிழ்ந்த நறியமலரும், தனியே அவள் உலாவிய இடமும், முளைபோல வளரும் இனிய பல்லும் நிறைத் திங்களை யொத்த முகமும், இளமைப் பருவமுடையவளது இணைந்த தனங்களும் என்னைத் துன்புறுத்தியவைக ளாகும்.

உன் வீட்டுப் பெரியோர் கடலினிடத்திலே புகுந்து உயிர்களைக் கொன்று வாழ்கின்றனர். நீயும் உடலிலே புகுந்து உயிர்களைக்கொன்று வாழ்கின்றாய். வலியிற் புகுந்து அடங்காத நின்தனங்களோ பாரமாக வுள்ளன. இடரிலே கிடந்து மெலியும் இடையை நீ இழந்துவிடாதே.

நின் தந்தை வலையால் உயிர்களைக் கொல்வான். நீயும் நின்னுடைய நெடிய கண்களாகிய வலையினால் உயிர்களைக் கொல்கின்றாய். முத்துவடத்தைத் தாங்கிய தனங்களின் கனத்தாலே மின்னலைப் போல அசைந்து தளரும் நின்னுடைய இடையை இழந்து விடாதே.

உன்னுடைய மூத்தோர் கடலில் ஓடும் படகினைக் கொண்டு உயிர்களைக் கொலைபுரிவர். நீயும் நின்னு

டைய வளைந்த புருவமாகிய வில்லால் உயிர்களைக் கொல்கின்றாய். நீ நினது பெருமையினையும் பிறர் படும் துன்பத்தினையும் பார்க்கமாட்டாய். தனங்களைச் சுமத்தலால் வாடுகின்ற மெல்லிய இடையை இழந்து விடாதே.

பவளஉலக்கையைக் கையாற் பிடித்து வெண்மை யாகிய முத்துக்களைக் குற்றுபவளுடைய சிவந்த கண்கள் குவளை மலர்களல்ல மிகக் கொடியனவாகும்.

புன்னை மரத்தின் நிழலில், புலால் நாறும் அலையினிடத்திலே, அன்னப் பறவையைப் போல் நடப்பவளுடைய சிவந்த கண்கள் மிகக் கொடிய கூற்றத்தைப் போன்றவைகளாகும்.

கள் பொருந்திய நீலப் பூவைக் கையிலேந்திக் கொண்டு புலால்வற்றல் காயுமிடத்திலேயிருந்து பறவையை ஓட்டுபவளுடைய சிவந்த கண்கள் வெள்ளிய வேல்களல்ல மிகவுங் கொடியனவாகும்.

மடப்பத்தையுடைய அன்னமே இவள் நடைக்கு உன்னுடைய நடை இணையாகமாட்டாது. ஆதலின் இவளுடைய பின்னே செல்லாதிருக்கக் கடவையாக. ஊருகின்ற அலைகளையுடைய கடலாற் சூழப்பட்ட உலகத்திலுள்ளாரையெல்லாம் வென்று திரிபவள் பின்னே அன்னமே செல்லாதிருக்கக் கடவையாக

மேற்கூறிய பொருளமைந்த பாடல்களைப் பாடினான் கோவலன். இப்பாடல்களின் பொருளாலே கோவலன் வேறொரு மங்கையினிடத்திலே மனமுள்ளவன் போல் தெரிகின்றதன்றோ? உண்மையில் கோவலன் வேறொரு மங்கையிடத்தும் மனத்தைச் செலுத்த வில்லை. ஊழ்தான் இத்தகைய பொருளமைந்த பாடல்களைப்பாடுவதிலே கோவலனுடைய கருத்தைச்

செலுத்திற்று. மாதவி கோவலனுடைய இப்பாடல்களைக் கேட்டு மனம் மருண்டாள். கோவலன் வேறு மங்கையினிடத்துக் காதலுடையவன் போலுமென மாறுபடக் கருதினள். அவளுடைய உள்ளத்திலே மாறுபாட்டுணர்ச்சி வேரூன்றிவிட்டது. கோவலனைப் போன்றே மாதவியும் வேறு யார்மாட்டும் நாட்டமுடையவளாக இல்லாதிருந்தும் மாறுபாட்டுணர்ச்சியினாலே, தானும் அவனைப் போலக் கானல்வரி பாடத் தொடங்கினள்.

இரு பக்கத்திலும் வண்டுகள் மிகுந்தொலிக்க அழகிய மலர்களால் ஆன ஆடையைப் போர்த்துக் கரிய கயற்கண்களை விழித்து அசைந்து நடந்தாய்; ஆகையால் காவிரியே நீ வாழ்வாயாக. நீ அவ்வாறு நடந்த செய்கையெல்லாம் நின் கணவனது திருந்திய செங்கோல் வளையாமையே. அதனை யான் அறிந்தேன் காவிரியே வாழ்வாயாக.

மலர்கள் நிறைந்த சோலையினிடத்திலே மயில்கள் ஆடவும், குயில்கள் விரும்பி இசை பாடவும், விருப்பம் பொருந்திய மாலைகள் அருகில் அசையவும், நடந்தாய்; ஆகையாலே காவிரியே வாழ்வாயாக. நீ அவ்விதம் விருப்பம் பொருந்திய மாலைகள் அருகில் அசைய நடந்த தன்மையெல்லாம் நின்கணவனது அச்சத்தைச் செய்யும் வேலின் தன்மையைக் கண்டே; யான் அதனையறிந்தேன். காவிரியே வாழ்வாயாக.

நின் கணவனது வளப்பம் பொருந்திய நாடு மகவாகவும், நீ அம் மகவினை வளர்க்கும் தாயாகவும் ஊழிதோறும் நடந்தும்பேருதவி நீங்கமாட்டாயாகையால், காவிரியே நீ வாழ்வாயாக. நீ அவ்விதம் நீங்காது ஒழுகுதல் உயிர்களைப் பாதுகாக்கும் சக்கரவர்த்தி

யாகிய நடுவுநிலைமை யுடையவனது அருளே. ஆதலால் காவிரியே வாழ்வாயாக.

இனிய கதிர்களையுடைய திங்கள்போலும் ஒளி தங்கிய முகத்தினையுடையவளது சிவந்தவாயின் அழ கிய பற்களுக்கு இவை ஒப்பாகாவாயினும், ஐயனே நீவிர் இந்த முத்துக்களை வாங்குமின் என்று கூறித் தினமும் மயங்கின மகன்போல வாராநிற்பீர். ஒலி மிகுந்த கடலானது விளங்கும் ஒளியினையுடைய வெள் ளிய முத்துக்களைத் தந்து மணம் பொருந்திய கான லிடத்துப் பூமாலைகளைப் பெற்று விற்பார்போல மீளும் காவிரிப்பூம் பட்டினமே எம்முடைய ஊராகும்.

வலிமை தங்கிய பரதர்களின் ஊரில் களவில் கூடிய பெண்களை அம் மகளிரது சிவந்த கையின் இறையிலுள்ள வளைகள் கழன்று தூற்றுவதை ஏழை யேமாகிய யாங்கள், ஐயனே! எவ்விதம் அறிவோம்? அன்னமானது அரும்பிப் பூத்த பூக்களின் பாரம் மிகுந்த உயர்ந்த கொம்பினிடத்திலே ஏறியிருப்ப, அவ் வன்னத்தையும் பூக்களையும் முழுத்திங்களும் மீன் கூட்டமும் என்று நினைத்து வண்டுகள் அப் பன் மலரை யூதுகின்ற காவரிப்பூம்பட்டினமே எம்மு டைய ஊராகும்.

உண்டாரைத் தன்னடிப் படுத்தி வெல்லு மள்க ளாகிய ஊண் மறையாது வெளிப்படும் பாக்கத்திலே மருந்து ஒன்று மில்லாமலே நீங்காத காம நோயை மாதரிடத்துத் தருகின்றாய் என்பதனை, ஐயனே யாங் கள் எவ்விதம் அறியாநிற்பேம்? தம்முடைய வண்ட லாகிய சிற்றில் முதலியவற்றைக் கடலின் அலைகள் ஊர்ந்துவந்து அழிக்கக் கையினால் மணலை வாரி யிறைத்துத் திங்களைப் போலும் முகத்தின்மேல்

நீண்ட பகைவர் புண்ணில் தோய்ந்த வேல் போலும் கண்களில் நீர் பெருகச் சிறுமியர் கடலைத் தூர்க்கும் காவிரிப்பூம் பட்டினமே எம்முடைய ஊராகும்.

துணையோடு பொருந்தி விளையாடும் நண்டினைப் பார்த்து, பூங்கொத்துக்கள் செறிந்த சோலையினிடத்திலே என்னையும் பார்த்து உணர்வு தன்னை நீங்கச் சென்ற ஒலிக்கும் அலையை யுடைய கடற் சேர்ப்பனது இயல்பினை வளர்ந்த கூந்தலை யுடையாய் அறிகின்றிலேன்.

தம்முடைய அருளும் தாமும் தமது குதிரை பூட்டிய தேரும் எம்மை நினையாது மறந்து விட்டாரோ? அவர் அவ்விதம் நினையாது மறந்து விட்டிருப்பின் அவ்விதமே விட்டொழிக. அழகிய மென்மையாகிய கொத்துக்களையுடைய அரும்புகளே! அன்னங்களே! நம்மை மறந்தவரை நாம் மறக்க மாட்டோம்.

வருத்தத்தை மிகுதிப்படுத்தும் மாலைப் பொழுதில் தனிமையால் வருந்தும் என் கண்ணினைப் போல துன்பத்தால் வருந்தாமல் இனிது துயில்கின்றாய். இனிய கள் திளைக்கும் வாயையுடைய நெய்தலே! நீ காண்கின்ற கனவில் கொடியராகிய தலைவர் கானலிடத்தே வரக் கண்டறிவாயோ?

பறவையின் இயல்பையுடைய குதிரைகள் பூட்டிய தேரின் உருளை சென்ற வழி முழுவதையும் தெளிந்த நீரையுடைய கடலே அழித்தாய்; யான் என் செய்வேன்? அவ்விதம் சிதைத்த நீ எம்மோடு இங்கிருந்து எம்மைப் பழிக்கும் அயலாரோடு உள்ளாயாதலால், எனது நோயினை அறியாய்; யான் என் செய்வேன்.

நம்மோடு சேர்ந்த காதலரது உருளைகளையுடைய நெடிய திண்ணிய தேர் சென்ற வழி மறையும்படி பரவுகின்ற வெள்ளமே; குளிர்ச்சி பொருந்திய பூக்களையுடைய சோலையே; துணையுடன் கூடி விளையாடும் அன்னமே, ஈரமாகிய குளிர்ந்த நீர்த்துறையே. இவ்வாறு பிரிவது தகாதென்று நீங்கள் தலைவர்க்குக் கூறுகின்றீரில்லை.

நம்மோடு பொருந்திய காதலரது உருளைகளையுடைய நெடிய திண்ணிய தேர் சென்ற வழி மறையும்படி பரந்த கடலின் வெள்ளமே, நீ வாழ்வாயாக. அவ்வாறு பரந்தாயாதலால் நீ எம்முடன் உறவு போலிருந்து நன்மை செய்யவில்லை. கடலோதமே நீ வாழ்வாயாக.

நல்ல முத்தாகிய பூணினை யணிந்து நன்மை பொருந்திய பவளமாகிய மேகலையை உடுத்துச் செந்நெற்பயிர்களை யுடைய மருத நிலத்து வயல்தோறும் அலைகள் உலாவுகின்ற கடலின் கரையையுடைய தலைவனே, புன்னை மரம் நெருங்கிய பொழிலிலே வலிய மகரக்கொடியையுடைய மன்மதன் அம்பெய்தமையாலான புதிய புண்கள் என்னுருவினைக் காணுதபடி மறைப்பின் அதனைத் தாய் அறியில் என் செய்வேன்?

கடல் முத்தாகிய நகையினைத் தோற்றி; அழகிய சிவந்த பவளமாகிய வாய் திறந்து பரதர் சேரியில் வலைகாயும் முன்னிடத்திலே, திரைதாவும் கடலின் கரையையுடைய தலைவனே! மாரிக்காலத்து மலரும் பீர்க்கின் மலர்போலும் நிறத்தைத் தலைவி கொள்வாளாயின் தெய்வத்தை வழிபட்டு, இக்கொடுமை செய்தவர் யாரென்று என் தாய் ஆராய்ந்தறியின் நான் யாது செய்வேன்?

புலால் நாற்றம் பொருந்தி முழங்கி, அந் நாற்றம் நீங்கப்பொழிலின் குளிர்ந்த விடத்தில் புகுந்து, ஆண்டு வுதிர்ந்த பலவுங்கலந்த பழம் பூக்களின் மணங்கமழ அலை யுலாவுகின்ற கடற்கரையை யுடையவனே! பல துன்பங்களும் பொருந்துதலால் இன்னதென்றுரைக்க முடியாத நோயைத் தலைவிதானேயறிந்து அனுப விக்க மெலிதலும் இரங்கலும் புலப்படாமையின் ஒரு வராலும் அறியப்படாத அந்நோயை அன்னையறியின் யான் யாது செய்வேன்?

மாலையிருள் விரிந்தது. பகலினைச் செய்யும் ஞாயிறு மறைந்தனன். போக்கற் கரிய தனிமை வருத்தத்தாலாகிய நீரினைக் கண்கள் மிகுதியாகச் சொரிந்தன. கட்டவிழ்ந்த மலரணிந்த கூந்தலையுடை யாய்! நம்முடைய வளை கழலும்படி நெருப்பினைச் சிந்தி வந்த இந்த மயக்கத்தையுடைய மாலைப்போது நம்மைப் பிரிந்த தலைவர் நாட்டிலும் இருக்குமோ?

ஞாயிறு மறைந்தான். கரிய இருள் பரந்தது. செவ்விய மலரை யொக்கும் மையுண்ட கண்கள் துன் பத்தாலாகிய நீரைச் சொரிந்தன. புதிய திங்களை யொக்கும் முகத்தினையுடையாய்! திங்களை உமிழ்ந்து ஞாயிற்றை விழுங்கிய இம் மாலைப்போது நம்மை விட்டுப் பிரிந்து சென்ற தலைவரது நாட்டிலும் உண்டாகுமோ?

பறவைகள் ஒலித்தல் அடங்கின. ஞாயிறு மறைந்தான். நெடிய கண்கள் நீரைச் சொரிந்தன. அவிழ்ந்த மலர்கள் நெருங்கிய கூந்தலையுடையாய்! மறத்தன்மை யுடையதாய் என் உயிரின்மேல் வந்த இந்த மாலைப்போது நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் உறையும் நாட்டிலும் உளதாகுமோ?

தாழையை வேலியாக வுடைய கழிக் கரையி னிடத்திலே வந்து, நம்முடைய விளையாட்டை மறக் கச்செய்து சென்றார் ஒருவர். அவ்வாறு மறக்கச் செய்து சென்ற அவர் நம்முடைய மயக்கத்தையுடைய மனத்தைவிட்டு நீங்குவா ரல்லர்.

சோலை சூழ்ந்த கழிக் கரையினிடத்திலே வந்து நீ அருள்செய்வாயாக என்று சொல்லிநின்றார் ஒருவர். அவ்வாறு நின்ற அவர் நமது மானையொத்த பார் வையை மறப்பாரல்லர்.

அன்னப் பறவை தன்னுடைய துணையுடனே விளையாடக் கண்டு நேற்று அதனையே பார்த்துக் கொண்டு நின்றார் ஒருவர். நேற்று அவ்வாறு நோக்கி நின்ற அவர் நமது பொன்னை யொத்த சுணங்கு போல நம்மை விட்டு நீங்குவாரல்லர்.

நாரையே நீ எம் கானலிடத்தை வந்து அடை யாதே. உடைகின்ற அலையையுடைய கடற் சேர்ப்ப னுக்கு எமது மிகுந்த நோயை உரைக்க மாட்டாய்; ஆதலால், நாரையே நீ எம் கானலிடத்தை வந்து அடையாதே.

மேற்கூறியவாறு பொருளமைந்த பாடலைப் பாடிய மாதவி செவ்வழிப்பாலை என்னும் இசையை எழுப்பிப் பின் வேறொரு பண்ணைப் பாடத் தொடங் கினாள்.

நுளையரது விளரிப்பாலையாகிய பண்ணினைப் பாடுங்கால் மாலைப்பொழுதே! இளி யென்னும் நரம்பு கைக்கிளை யென்னும் நரம்பிற்சென்று மயங்க வந்து தங்கினாய். அவ்வாறு தங்கினாய் நீயாயின், என்னுயி ரைக்கொள்வாயாக.

பிரிந்துசென்ற தலைவர் அன்புற்றுரைத்த பெரிய தண்ணளியாகிய நிழலிலே தனித்திருந்து இரங்கி வாழ்பவருடைய உயிரைச் சூழ்ந்துள்ள மாலையே! உயிரைச் சூழ்ந்துள்ளாய் நீயாயின், உள்ளிருக்கும் வலியில்லாத வேந்தனது மதிலின் புறத்துள்ள வேந்தற்கு மாலையே நீ என்ன உறவாவாய்?

துன்பமாகிய நோய் மிக ஞாயிறு மேல் கடலிற் சென்று விழ உலகத்திலுள்ளார் கண்ணினை மூட மயக்கத்தை யுடைய மாலையே வந்தாய். மாலைப் பொழுது நீயேயாயின், முன் மணந்தவர் பிரிந்து சென்ற அவரேயாயின், மாலையே இவ்வுலகந்தான் மிடியுற்றது நீ வாழ்வாயாக.

தீயைப் பரப்பிவந்த வருத்தத்தைச் செய்யும் இம் மயங்கிய மாலைப்பொழுது நம்மை வருத்தும் என்று நினையாது நாம் துணியும்படி யுரைத்த இந் நன்மொழி யோடே பூ நாறுஞ் சோலையிடத்தே கூறிய பொய்யாகிய சூளுரையைப் பொறுப்பாயாக என்று, பெரிய கடல்தெய்வமே நின் மலர் போலும் அடியை வணங்குவோம்.

இவ்வாறு மாதவியும் வரிப்பாடல் பாடினாள். இப் பாடல்களின் கருத்து, மாதவி தான் பிறன் ஒருவன் மேல் மனம் வைத்துள்ளாள் போல இருத்தலைக் கோவலன் கண்டான். அவனுக்கு மாதவிமேல் வெறுப்புண்டாகிவிட்டது. ஊழும் வந்து பொருந்திக்கொண்டது. எனவே மாதவியைத் தழுவியிருந்த கையை அகற்றித் தான் மட்டும் புறப்பட்டு ஏவலாளர் தன்னைச் சூழச்சென்றான். மாதவி கோவலனின் இவ் வெதிர்பாராச் செய்கைக் கண்டு துணுக்குற்றாள்.

தானும் தன்னுடைய வண்டியிலே ஏறித் தன்னுடைய மனையைச் சேர்ந்து அரசனுடைய செங்கோல் இனிது வாழ்க என்று வாழ்த்தியிருந்தாள்.

## 8. வேனில் வரவு

திருமாலுடைய திருவேங்கட மலை வடக்கு எல்லையாகவும் குமரியினுடைய கடல் தெற்கு எல்லையாகவும் வரையறுக்கப்பட்டது தமிழ் நாடு. மாடங்கள் பொருந்திய மதுரையும், பெருமை பொருந்திய உறையூரும், ஆரவாரம் மிகுந்த வஞ்சி நகரும், ஒலிக்கின்ற நீரையுடைய காவிரிப்பூம்பட்டினமும் என்னும் நான்கிடத்தும் அரசுவீற்றிருந்த மிகுந்த புகழினையுடைய அரசனாகிய காமனுக்கு மகிழ்ச்சியைச் செய்யும் துணைவனாகிய இளவேனில் என்பான் வந்து விட்டான், என்று தென்றல் என்பவன் குயிலோனுக்குக் கூறினான். தென்றல் தூதன் இவ்வாறு குயிலோனுக்குக் கூறவே காமனுடைய சின்னம் ஊதியாகிய அக்குயிலன் காமனுடைய சேனையாயுள்ளவர்களெல்லாரும் அழகிய காமப் போர்க்கோலத்தைக்கொள்ளுங்கள் என்று காமனுடைய சேனையாகிய மகளிர் எல்லோருக்கும் தெரியப் படுத்தினான்;

கடல் விளையாட்டினிடத்தே கோவலன் ஊடிச் சென்றமையால் அவனுடன் கூடாது தனியளாய் இல்லின்கண் சென்று சேர்ந்த மாதவி, காமன் சேனையாகிய மகளிரெல்லாரும் காமப்போருக்குப் போர்க்கோலங் கொள்ளுங்கள் என்னும் குயிலனது கட்டளையை மேற்கொண்டவளாய் மிகவுயர்ந்த தனது இள

வேனிற்குரிய நிலா முற்றத்தினிடத்தே இனிது ஏறி யமர்ந்தாள்,

அவ்வாறு ஏறி யமர்ந்த மாதவியானவள் தென் கடல் முத்தையும் பொதிய மலைச் சந்தனத்தையும் கொங்கை முற்றமாகிய பரப்பிலே கையுறையாகத் தாங்கினுள். ஒன்பது வகைப்பட்ட இருப்பினுள் பதுமாசனம் என்னும் நன்மையமைந்த இருப்பிலே இருந்தாள். கோவை கலங்காத மரபினையுடைய யாழைக் கையிலே வாங்கினுள். ஏழுவகை சுரங்களையும் இனிமையாக மீட்டினுள். வலிவு, மெலிவு, சமன் என்னும் மூவகைச் சுருதிகளையும் ஏற்றவாறு தழுவி, அகநிலை, புறநிலை, அருகியல், பெருகியல் ஆகிய மருதப் பண்களை அவற்றிற்குப் பொருந்திய சுரங்களுடன் தெளிவாக வாசித்தாள். புறநிலை மருதப் பண்ணைப் பாடும்போது அவளுடைய உள்ளம் நெகிழ்ந்தது. அவள் காமன் கணையால் திகைத்தாள். கோவலனுக்குத் திருமுகம் போக்குதல் வேண்டும் என்னும் எண்ணம் அவளுக் குண்டாயிற்று. சண்பகம், மாதவி, பச்சிலை, பித்திகை வெள்ளிய பூவாகிய மல்லிகை என்னும் மலர்களாலும் வெட்டிவேராலும் அழகிய செங்கழுநீரின் நெருங்கிய மெல்லிய இதழ்களாலும் தொடுக்கப்பெற்ற பூக்களின் மணமிகுந்த செவ்வியையுடைய மாலையின் நடுவிடத்தே தொடுக்கப்பெற்ற நல்ல தாழம்பூவினது முடக்கத்தையுடைய வெள்ளிய தோட்டிலே அதற்கருகில் அமைந்த கொழுமையான முனையை எழுத்தாணியாகக் கொண்டு அதைச் செம்பஞ்சுக் குழம்பிலே தோய்த்து எழுதலானுள்;

"உலகில் நிலை பெற்ற உயிர்த்தொகைகள் எல்லாவற்றையும் தாம் தாம் மகிழ்தற்கேதுவாகிய துணை

யோடு சேர்ப்பிக்கும் இனிமைமிக்க இளவேனில் என்பான் இளவரசன் ஆதலின் காரியத்தை நேர்மையாகச் செய்யான். அந்திப்போதாகிய அழகிய யானையின் பிடரியிலே தோன்றிய திங்களாகிய செல்வனும் நேர்மையுடையவன் அல்லன். சேர்ந்தோர் சிறிது பொழுதை இடையே பயனின்றிக் கழிப்பினும், நீங்கிச்சென்றோர் தம் துணையை மறந்து இருப்பினும் காமனானவன் நல்ல பூவாளியாலே அந்த உயிர்களைக் கொள்ளை கொள்ளுதல் புதுமையன்று. இவ்வாறு செய்தல் அவனுக்கு இயல்பேயாம். இதனை நீவிர் அறிவீராக'' என்று எழுதிப் பசப்படைந்த உடலையுடையவளாய்த் துன்பம் மிகுந்த மாலைக்காலத்தே வசந்தமாலை என்பாளை யழைத்து, 'இம்மாலையில் எழுதியுள்ள பொருள்களையெல்லாம் கோவலற்கு விளக்கி அவனை இப்போதே இங்கு அழைத்துக்கொண்டு வருவாயாக, என்று கூறினாள்.

இவ்வாறு மாதவியால் ஏவப்பெற்ற நீண்ட கண்களையுடைய வசந்தமாலையானவள் கடைத்தெருவிற் கோவலனைக் கண்டு மாதவியளித்த முடங்கலை அவனிடம் கொடுத்தாள். அதனைப்பெற்ற கோவலன் செய்தியை உணர்ந்து மாதவியின் ஓலையை மறுத்ததுடன் பல கூறி மாதவியையும் இகழ்ந்தான். இவ்வாறு கோவலனால் மறுத்து இகழப்பெறுதலைக் கேட்ட வசந்த மாலையானவள் வருந்தி வாட்டமுற்ற உள்ளத்தையுடையவளாய் மாதவிபாற் சென்று நிகழ்ந்ததை யுரைத்தாள். இதனைக் கேட்ட மாதவி வருந்தி மாலைப்போது வாராதொழியினும் காலைப் போதில் கட்டாயம்வருவார் காண்போம், எனக்கூறிச்

செயலற்ற மனத்தோடு படுக்கையினிடத்திலே கண்ணுறக்கம் கொள்ளாது கிடந்தாள்.

## 9. கனுத்திறம் உரைத்தல்

அகன்ற மனையினிடமெல்லாம்; அரும்பு கட்டவிழ்ந்த முல்லையின் விளக்கம் பொருந்திய மலரை நெல்லுடன் தூவிப்; பகலவன் மறைந்த மாலைப்பொழுதிலே அழகிய விளக்கையேற்றி, இராப்பொழுதிற்குத் தகுந்த கோலத்தை மகளிர் அனைவரும் கொண்டனர்.

### மாலதி கதை

முன்னொரு நாளிலே மாலதி என்னும் பெயருடைய ஒரு பார்ப்பனி தன்னுடைய மாற்றாளின் குழவிக்குத் தன்னுடைய பாலை அவளில்லாத சமயத்தில் அக்குழந்தை அழுதமை கண்டு சங்கால் ஊட்டினாள். பால் விக்கிய படியினாலே அக்குழந்தை இறந்தது. அதனைக் கண்ட மாலதியானவள் அஞ்சி நடுங்கினாள். பார்ப்பானும் அவன் மனைவியும் தன் மீது அடாப்பழி கூறுவரே யன்றி நல்லன கூறாரென்று கலங்கினாள். அவள் அக் குழந்தையை எடுத்துக்கொண்டு கற்பகக் கோயில், ஐராவதத்தின் கோயில், பலதேவர் கோயில் சூரியன் கோயில், இறைவன் ஊராகிய கைலாயம் நிற்கும் கோயில், முருகன் கோயில், வச்சிரப்படை நிற்கும் கோயில், சாத வாகனன் கோயில், அருகன் கோயில், சந்திரன் கோயில் ஆகிய எல்லாக் கோயிலுக்குஞ் சென்றாள். தேவர்களே! எனக்கு நேர்ந்த இவ்விடுக்கண்ணைத் தீர்ப்பீர்களாக என்று, வேண்டிக்கொண்டு பின்னர் ஒரு பாசண்டச் சாத்தன் கோயிலடைந்து

குறை கூறி யிரங்குநின்றாள். அப்போது ஓர் இடாகினிப் பேய் பெண்வடிவாய் அவளிடத்திற்கு வந்து அவளைப் பார்த்து; குற்றமற்ற மாலதியே! செய்யப் பெற்ற தவ மில்லாதவர்களுக்குத் தேவர்கள் வரங் கொடுக்கமாட்டார்கள். இது பொய்யான மொழி யன்று மெய்யான மொழியே யாகும். உன்னுடைய கையிலே உள்ள பிணத்தைக் கொடு பார்ப்போம் என்று கூறி மாலதியின் கையிலிருந்த பிணத்தைப் பறித்துக்கொண்டு மிகுந்த இருளான இடத்திற்குச் சென்று தின்றுவிட்டுப் போய்விட்டது. இப் பேய் குழியில் புதைக்கும் பிணங்களை யெடுத்துத் தின்ப தாம்.

இவ்வாறு பிணத்தை யிழந்த மாலதியானவள் இடிக்குரலைக் கேட்ட மயில் போல ஏங்கியழுது அரற்றினாள். அப்பொழுது அந்தச் சாத்தன் என்னும் தெய்வம் மாலதியைப் பார்த்து 'அன்னாய்! அழா தொழிவாயாக. நீ திரும்பிச் செல்லும் வழியிலே குயில்களையுடைய ஒரு மரச் செறிவின் நிழலில் இறந்த குழவி உயிருடன் கிடத்தலைக் காண்பா' யென்று கூறிச் சாத்தன் தான் அவளுக்குக் குறிப்பிட்ட இடத்திலே ஒரு குழவியாகச் சென்று கிடந்தான். மாலதி அவ்வாறே சென்று அக்குழவியைப் பற்றிச் சிறிதும் ஐயப்படாமல் தான் இழந்த குழவியே யென்று துணிந்து அதனைக் கொண்டுபோய் அதன் தாய் கையிலே கொடுத்தாள்.

இவ்வாறு குழவியாய் வந்த சாத்தன் கல்வி கேள்விகளில் சிறந்தவனாய்த் தாய் தந்தையர் இறந்த பின்பு தன் தாயத்தாரோடும் வழக்குரைத்துத், தந்தை தாயாருக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன் முதலிய

வற்றைச் செய்து முடித்துத், தன் மனைவியாகிய தேவந்தியோடு கூடி வாழ்ந்திருந்தான். பின்பு ஒரு நாள் சாத்தன் தேவந்திக்குத் தன்னுடைய திரு மிகுந்த தெய்வ வடிவத்தைக் காட்டிவிட்டுச் சாத்தன் கோயி லுக்கு நீ வருவாயாக என்று கூறி மறைந்தான்.

தேவந்தி சாத்தன் கோயிலுக்குச் சென்று என்னு டைய தலைவனைத் தருவாயாக என்று வழிபட்டுக் கொண்டிருந்தாள். இந்தத் தேவந்தி தன்னைப் போல் கணவனைப் பிரிந்திருக்கும் கண்ணகியும் கண வனைப் பெறவேண்டுமென்று, அறுகு சிறு பூளை நெல் முதலியவற்றைச் சாத்தன் கோயிலில் தூவி வழி பட்டதுடன் கண்ணகியினிடத்திற்கும் போய் 'நீ நின் னுடைய கணவனைப் பெறுவாயாக' என்று வாழ்த்தி னாள்.

தேவந்தி இவ்வாறு தன்னை வந்து வாழ்த்தி யதைக் கேட்ட கண்ணகி அத் தேவந்தியைப் பார்த்து, 'நீ இவ்வாறு கூறுவதனாலே யான் என் கணவனைப் பெறுவேனாயினும்; யான் கண்ட ஒரு கனவினாலே என்னுடைய நெஞ்சம் கலக்கத்தை யடைகின்றது. அக் கனவுதான் என்னை யென்பாயாயின் கூறுவேன் கேட்பாயாக! என் கணவன் என் கையைப் பற்றி அழைத்துச் செல்ல, நாங்களிருவரும் ஒரு பெரிய ஊரை யடைந்தோம். அவ்வாறு அடைந்த ஊரிலே அவ் வூரார் எங்களுக்கு ஆகாத ஒரு பழிச் சொல்லை இடுதேள் இட்டாற்போல எங்கள்மேலேபோட்டனர். அதனால் கோவலனுக்கு ஒரு துன்பம் உண்டா யிற்று என்று பிறர் சொல்ல அதனை, நான் கேட்டு அவ்வூர் அரசன் முன் சென்று வழக்குரைத்தேன். அதனால் அவ்வரசனோடு அவ் வூருக்கும் ஒரு தீங்குண்

டாயிற்று. அது தீக்கனாவாதலால் அதனை நினக்குச் சொல்லேன். நெருங்கிய வளையல்களை யுடையாய்! அப்பொழுது மிகக் கொடிய ஒரு தீக்குற்றம் உண்டா யிற்று. நீ அதனைக் கேட்பாயாயின், அது நினக்கு மிகுந்த நகைப்பைத் தரும்.''

இவ்வாறு கண்ணகி கூறியதனைக் கேட்ட தேவந்தி, "பொன்னாலாகிய வளையினையுடையாய், நீ கண வனால் வெறுக்கப் பெற்றாய் அல்லை. முற் பிறப்பிலே கணவன் பொருட்டுக் காக்க வேண்டியதாகிய ஒரு நோன்பினைக் காவாது தவறினாய்; அதனால், நினக்கு இப் பிறப்பிலே இப்பிரிவுத் தொல்லை உண்டாயிற்று. முற் பிறப்பிலே செய்த அத் தவற்றினை இப்போது மாற்றலாம். காவிரி கடலொடு சேரும் கானலி டத்தே விசாலமான சோம குண்டம் சூரிய குண்டம் என்னும் இரண்டு புண்ணியத் துறைகள் உள்ளன. அவைகளிலே நீராடிக் காமவேள்கோயிலிலே புகுந்து வணங்கிய மங்கை நல்லார் தம் கணவருடன் இவ்வுல கிலே இன்புற்றுப் போக பூமியை அடைவர். நாமும் அப்பொய்கை யாடுதற்கு ஒரு நாள் செல்வோம்" என்று கூறினள். இவ்வாறு நீராடுதலும் தெய்வந் தொழுதலும் எங்கட்கு இயல்பல்ல வென்று கூறித் தேவந்தி கூற்றைக் கண்ணகி மறுத்துவிட்டாள். அப்போது கோவலன் மாதவியைப் பிரிந்து தன்னு டைய வீட்டு வாசலை யடைந்தான். அவனைக் கண்ட ஓர் ஏவற் பெண் அவன் வருகையைக் கண்ணகிக்கு உரைத்தாள். கோவலனும் உள் நுழைந்து படுக்கை யறையை அடைந்தான். ஆண்டுக் கண்ணகி வாடிய உடலினளாய் உறைதலைக் கண்டான். அவன் கண் ணகியை நோக்கி, 'வஞ்சம் பொருந்திய கொள்கையை

யுடைய பொய்க் காரிகையோடுங் கூடி யொழுகின மையால் நம் குலத்திலுள்ளார் தேடித் தந்த மலைபோலும் பெரிய பொருட்குவியலை யெல்லாம் இழந்து இப்போது வறுமையை அடைந்தேன். இந்நிலை எனக்கு மிகுந்த நாணினைத் தருகின்றது' என்று கூறினான்.

இவ்வாறு கோவலன் கூறியதைக் கேட்ட கண்ணகி மாதவிக்குக் கொடுத்தற்பொருட்டுப் பொருளின்மையினாலே இப்படிக் கவன்று கூறுகிறான் என்று எண்ணினாள். தன்னுடைய ஒளி பொருந்திய முகத்தினிடத்தே முறுவலைத் தோற்றுவித்துக்கொண்டாள். 'ஐயனே! என்னிடம் இன்னும் இரண்டு சிலம்புகள் உள்ளன. அவற்றைக் கொள்வீராக' என்று கூறினாள்.

கண்ணகி கூறியதைக் கேட்ட கோவலன் இத்தகைய இயல்பு வாய்ந்த காரிகைக்குத் தீமை செய்தோமே என்று கலங்கினான். 'நீ கூறிய இச்சிலம்பையே முதலாகக்கொண்டு நான் இழந்த பொருளை மீட்டுந் தேடுதற்கு எண்ணினேன். என்னோடு நீயும் மதுரைக்குப் புறப்படுவாயாக' என்றான். வினையா கூட்டுதலால் அவ்வாறு உடன் செல்லுவதற்குக் கண்ணகியும் ஒருப்பட்டாள். பொழுது விடிவதற்கு முன் இருவரும் காவிரிப்பூம்பட்டினத்தை விட்டு மதுரையை நோக்கிப் புறப்பட்டனர்.

# 10. நாடு காண்டல்

காலை யரும்பி மலரும் கதிரவனும்
மாலை மதியமும்போல் வாழியரோ—வேலை
அகழால் அமைந்த அவனிக்கு மாலைப்
புகழால் அமைந்த புகார்.

அவ்வாறு புறப்பட்ட கோவலனும் கண்ணகியும், ஊழ்வினை தங்களைச் செலுத்துதலாலே, ஆட்டுக் கடாயும் கவரிமானும் அன்னமும் ஆகிய இவைகள் ஓரினம் போலக் கூடித் திரியும் சிறப்பினையுடைய இடைகழியைக் கடந்து மணிவண்ணனாகிய திருமாலின் கோயிலை வலஞ்செய்து நீங்கினர். உயர்ந்த ஐந்து கிளையினையும் பசிய இலையினையுமுடைய அரச மரத்தின் நீழலில் எழுந்தருளியுள்ள புத்ததேவன் அருளிச் செய்த ஆகமத்தை விண்ணியங்குவோராகிய சாரணர் யாவருக்கும் பொருள்விளங்கக் கூறும் இந்திர விகாரங்கள் ஏழினையும் முறையே கண்டு அவற்றை நீங்கிச் சென்றனர்.

புலால் உணவைத் துறந்து, பொய் கூறாமையாகிய விரதத்தொடு பொருந்தி, அழுக்காறு அவா முதலிய தீக்குணங்களைக் கைவிட்டுப் பொருணூல்களை உணர்ந்து ஐம்புலன்களும் அடங்கிய கொள்கையினை யுடையராய் உண்மைத் திறனை யுணர்ந்த சிரியோர்கள் கூடிய ஸ்ரீ கோயிலில் அருகர் சித்தர் உபாத்தியாயர் ஆசிரியர் சாதுக்கள் என்னும் பஞ்ச பரமேட்டிகளும் நிலைபெற்ற மன்றத்தின்கண் அழகிய பூவினையுடைய அசோகின் நிழலின்கண் பொருந்திய சிலாவட்டத்தையும் வணங்கி வலஞ்செய்தனர். உலகின்கண் உள்ளார் போக்கு வரவு செய்தற்கமைந்த ஊர் வாயிலையும் அக்

காலத்துச் செல்வாரோடு கலந்துசென்று நீங்கினர். பின்னர் இலவந்திகையினது மதிலின் புறத்தேசென்று காவிரிக் கரையிடத்துச் சங்கமுகத்துறை வாயிலையும் நீங்கினர்.

நல்ல நீரினையுடைய காவிரியின் கரையின்கண்ணுள்ள சோலையினையுங் கடந்து ஒரு காத தூரத்தைத் தாண்டிக் கவுந்தியடிகள் என்பார் எழுந்தருளியிருந்த பள்ளிக்குப் பக்கத்ததாகிய ஓரழகிய சோலையின்கட் சென்று தங்கினர். அதுவரை வெளியே புறப்பட்டு வழிநடந் தறியாத கண்ணகி, வழிநடையினுல் மிக வருந்திப் பெருமூச் செறிந்து, மதுரைமூதூர் எது? என்று கேட்டாள். தன் காதலி அவ்வாறுகேட்டலும் கோவலன் துன்பநகை புரிந்து, 'ஆறு அல்லது ஐந்து காத தூரந்தான் என்று பொருள்படும்படியாகவும் மதுரை இன்னும் ஆறைங்காத தூரத்திலேயிருக்கிற' தென்று விடையிறுத்தான். பின்னர்க் கண்ணகியோடு பள்ளிக்குச் சென்று அங்கிருந்த கவுந்தியடிகளைக் கண்டு வணங்கினுன்.

கவுந்தியடிகள் கோவலனையும் கண்ணகியையும் பார்த்துச் "செல்வர்களாகிய நீவிர் தீவினையாளரைப் போல இவ்வாறு வருதற்குக் காரணம் யாதோ?" என்று கேட்டார். அதற்குக் கோவலன் கவுந்தியடிகளைப் பார்த்துப் 'பெரியீர், நான் தங்களுடைய கேள்விக்கு விடைகூறத் தகாத நிலையி லிருக்கிறேன். ஆயினும் மதுரைக்குச் சென்று பொருளீட்டும் பெரு விருப்பினை யுடையேன் என்று மட்டுங் கூறிக்கொள்ளுகின்றேன்' என்ருன். இவ்வாறு கூறிய கோவலனைப் பார்த்துக் கவுந்தியடிகள், 'மதுரைக்குச் செல்வது நின்னுடைய நோக்கமாயின், இப்பெண்ணினுடைய

அடிகள் வழியில் உள்ள பருக்கைக் கற்களாகிய பகையினை வெல்லமாட்டா. மேலும், மதுரையானது இடையே நாட்டையும் காட்டையும் உடையதாய் மிகு தூரத்தி லிருக்கிறது. ஆதலின், இப்பெண்மணி யுடன் நீ மதுரைக்குச் செல்ல விரும்புவது தக்கதா காது' என்று அறிவுரை கூறியருளினார். கோவலனது உள்ளம் ஊழின் வழியே சென்றதாகலின், கவுந்தி யடிகள் கூறியதைக் கேட்கவில்லை. மதுரைக்குச் செல்லத்தான் வேண்டு மென்று உறுதியாகக் கூறினான். இயற்கையாகவே அருள் உள்ளமுடைய கவுந்தியடிகட்குக் கண்ணகியையும் கோவலனையும் தனியே அனுப்ப விருப்பமில்லை. நாமும் மதுரைக்குச் சென்றால் இவர்கட்கும் துணையாகவிருக்கும். நாமும் மதுரையிலுள்ள அறிஞர்களின் அறவுரையைக் கேட்டு ஆண்டுள்ள அருக தேவனையும் ஏத்தலாம். என்னும் உள்ளமுடையராய்த் தம் முள்ளக்கிடக் கையைக் கோவலனுக் குரைத்தார். கோவலன் அவ்வாறு தம்முடன் கவுந்தி யடிகள் வரின் தம் துயரெல்லாம் ஒழியுமென்று கவுந்தி யடிகளின் அருட் டன்மையைப் போற்றினான்.

கவுந்தி யடிகள் மதுரை செல்லும் வழியிலுள்ள தொல்லையை யெல்லாம் கோவலனுக்கு விளக்கமாகக் கூறினார். பின்னர் ஐயக் கடிகையையும் உறியையும் மயில்தோகையையும் எடுத்துக் கொண்டு கவுந்தி யடிகள் 'எமக்குத் தெய்வம் வழித்துணையாக' என்று கூறி உடன் சென்றனர்.

இவ்வாறு புறப்பட்ட மூவரும் வழியிலுள்ள காட்சிகளையெல்லாம் பார்த்துக்கொண்டு ஒருநாளைக்கு ஒரு காததூரம் வழி நடந்து செல்வாராயினர். இவ்

வாறு செல்லும்போது ஒரு நாள் திருவரங்கத்தை யடைந்து ஆங்குள்ள ஒரு பொழிலின்கண் தங்கியிருந் தனர். அப்போது ஆண்டு அருகதேவனைப் போற்றும் சாரணர் வந்து அம் மூவருக்கும் அறம் உரைத்தனர். அவ் வறவுரையைக் கேட்டு மூவரும் சாரணரைத் தொழுதனர்.

## வம்பப் பரத்தையும் வறுமொழியாளனும்

பின்னர் அவர்கள் திருவரங்கச் சோலையை விட்டு நீங்கி உறையூரை யடுத்திருந்த ஒரு பொழிலின்கண் தங்கி யிளைப்பாறி யிருந்தனர். அப்போது அவ்விடத் திற்கு ஒரு புதுப்பரத்தையும் வீண்பேச்சாளனும் வந் தனர். அவர்கள் கண்ணகி கோவலன் என்னும் இருவ ருடைய பேரழகினையுங் கண்டு வியந்து இவர்கள் காமனும் அவன் தேவியுமோ என வியந்தவர்களாய்க் கவுந்தியடிகளைப் பார்த்துப் "பெரியீர், தங்களுடன் வந்திருக்கும் இவர்கள் யாவர்?" என்று வினவினர். அதற்குக் கவுந்தியடிகள் "அவர்கள் எம்முடைய மக்கள். வழி நடந்தமையால் வருத்தமுற் றிருக்கின்ற னர். அவர்களிடம் சென்று தொல்லை செய்யாது அக லச் செல்லுமின்" என்று கூறினர். இதனைக் கேட்ட அவர்கள், "ஒருவயிற்றில் பிறந்தவர்கள் கணவன் மனை வியாகக் கூடி வாழ்க்கை நடத்துதல் என்பது நீவிர் கற்றறிந்த நூல்களில் யாண்டேனும் உரைக்கப்பட் டுள்ளதோ" என்று இகழ்ச்சியும் குறும்பும் தோன்றக் கேட்டனர். அவ்வுரையைக் கேட்ட கண்ணகி நடு நடுங்கிக் காதினைப் பொத்திக்கொண்டு வருந்தி நின் றாள். கவுந்தியடிகளுக்குச் சினம் மூண்டது. 'என் பொற்கொடியை இகழ்ந்துரைத்த நீவிர், முள்ளுடைக் காட்டில் முதுநரி ஆகுவீர்களாக' எனச் சாபம் இட்

டார். தவத்தா லுயர்ந்தவர் வாக்குப் பொய்க்குமா? "குண மென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி கணமேயுங் காத்த லரி" தன்றோ? கவுந்தியடிகள் சாபம் கொடுத்த அளவில் அந்த வம்பப் பரத்தையும் வறு மொழியாளனும் அவ்வாறே குறுநரிகளாகிக் கூவிளி செய்தனர். மக்கள் யாக்கையிலிருந்த இருவரும் ஓரி யாக்கையை உற்றுப் பேரிரைச்சல் இடுதலைக் கண்ட கோவலனும் கண்ணகியும், அவர் தம்மை இகழ்ந் துரைத்தமையையும் மறந்து,

> " நெறியின் நீங்கியோர் நீரல கூறினும்
> அறியாமை என்(று) அறிதல் வேண்டும்"

என்று நினைந்து அவர்கள் பொருட்டு இரங்கினர். இஃதன்றோ நற்குண முடையார் செய்கை. இரங்கி னதோ டமையாது 'பெரியீர், இவர்கட்கு உய்திக்காலம் உரைத்து அருள்வீர்களாக' என்று கவுந்தியடிகளை ஆற்றாமையோடு வேண்டிக்கொண்டனர். அதற்குக் கவுந்தியடிகள், "தமது அறியாமை காரணமாக இன்று இழிந்த பிறப்பினை யடைந்த இவர்கள், உறையூர் மதில் புறத்தேயுள்ள காவற் காட்டில் ஓராண்டு வருந்தித் திரிந்த பின்னர் முன்னைய மக்கள் வடிவத்தை அடை வார்களாக" என்று சாப நீக்கமும் உரைத்தருளினார். அதன் பின்னர் மூவரும், கோழியானது யானையை வெற்றி கொண்ட இடத்திலே அமைக்கப் பெற்றமை யின் 'கோழி' என்னும் பெயரினையுடைய உறையூரை யடைந்தனர்.

முதலாவது
புகார்க் காண்டம் முற்றிற்று.

# மதுரைக் காண்டம்

## 11. காடு காண்டல்

உறையூரை யடைந்த கோவலனும் கண்ணகியும் கவுந்தியடிகளும் ஆங்கு அசோக மரத்தின் கொழு விய நிழற்கண் எழுந்தருளிய அருக தேவனைத் தொழுது வணங்கினர். அங்கு அருகனது பள்ளி யிடத்தே உறைந்திருந்த முனிவர்கள் எல்லோருக்கும் திருவரங்கத்துச் சோலையினிடத்திலே சாரணர் கூறிய அறவுரையைக் கவுந்தியடிகள் கூறியருளினார். மூவரும் அன்று அங்கே தங்கியிருந்தனர். மறுநாள் அதிகாலையில் எழுந்து தென்திசையை நோக்கிச் செல்லலாயினர். அதிகாலையிலேயே புறப்பட்ட அவர்கள் ஞாயிறு புறப்பட்ட காலையில் வளப்பம் பொருந்திய நீர் நிறைந்த வயல்களும் குளங்களும் அழகாக விளங்கிக்கொண்டிருந்த ஓரிடத்திலே யுள்ள ஒரு பொழிலிற் சென்று இளைப்பாறும் பொருட்டுத் தங்கியிருந்தனர்.

### மறையோன் வழி கூறுதல்

இவர்கள் இவ்வாறு தங்கியிருக்கும்போது ஒரு மறையோன், "பஃறுளி யாற்றுடனே பல பக்க மலை களையுடைய குமரி மலையினையும் கடல் கொண்டபடி யால் வடக்கிலுள்ள கங்கையினையும் இமய மலையை யும் வெற்றிகொண்டு தென்னாட்டை யாண்ட பாண் டியன் வாழ்க. திங்கட் செல்வன் திருக்குலமானது விளக்கமுறும்படி ஆயிரங் கண்ணனாகிய இந்திரன் பேர்ட்ட பாரம் மிகுந்த ஆரத்தை அழகு மிகுந்த மார்

பின்கண் தாங்கிய பாண்டியன் வாழ்க. மழை பெய்யாத முகிலினை விலங்கிட்டு அடக்கிய பாண்டியன் வாழ்வானாக,'' என்று கூறிப் பாண்டியனை வாழ்த்திக் கொண்டே அப்பொழிலின் ஒருபக்கத்தில் வந்து தங்கியிருந்தான்.

அவ்வாறு வந்து தங்கிய மறையவனைக் கண்ட கோவலன், 'நும்முடைய ஊர் யாது? நீவிர் இங்கு வரக் காரணம் யாது?' என்று கேட்டான். அதற்கு அம்மறையோன் 'யான் குடகு மலைப் பக்கத்தி லுள்ள மாங்காடு என்னும் ஊரிலுள்ள ஒரு பார்ப்பான். திருவரங்கத்தில் திருமால் பள்ளிகொண்டுள்ள திருக்கோலத்தையும், திருவேங்கடம் என்னும் திருமலையினிடத்தில் அத்திருமாலாகிய நெடியோன் நின்ற வண்ணத்தையும் காட்டுவாயாக என்று என்னுடைய உள்ளத்தைக் கண்கள் வருத்துதலால் புறப்பட்டு வழி நடந்து இங்கு வந்துசேர்ந்தேன். பாண்டியனது நாட்டுச் சிறப்பினையும் அவன் கொடை முதலிய நற்செய்திகளையும் என் கண் குளிரக் கண்டேன். ஆதலின், அப் பாண்டியமன்னனை வாழ்த்தி ஈண்டிருந்தேன். இதுவே என்னுடைய வரலாறு' என்றனன்.

இவ்வாறு அம்மறையோன் பாண்டிய நாட்டிலிருந்தும் வருகிறேன் என்று கூறக் கேட்ட கோவலன் மதுரைக்குச் செல்லும் நல்ல வழியினை நீ கூறுவாயாக என்று கேட்டான். இவ்வாறு கோவலனாற் கேட்டுக் கொள்ளப்பட்ட மறையோன் மதுரைக்குச் செல்லும் வழிகளையும் இடையே யுள்ள புதுமைகளையும் கோவலனுக்குக் கூறலானான்.

வெவ்விய கதிர்களையுடைய ஞாயிறாகிய அரசன் வெயிலை மிகுதியாக வீசுதலால், அமைச்சரும் அரசனும் செங்கோல் முறை திறம்பி அரச தருமம் தவறிய நாடுபோல, முல்லை நிலமுங் குறிஞ்சி நிலமும் தமக்குரிய தன்மையில் வேறுபட்டுப் பாலை நிலத்தைப் போல விளங்குகின்றன. இத்தகைய காலத்தில் நீவிர் மெல்லியலாகிய பெண்ணுடன் வந்திருக்கின்றீர். கற்பாறையும், குன்றும், கண்ணை மயக்கும் கரடு முரடான வழிகளும் பேய்த்தேருமாக வுள்ள இந்தக் கொடிய பாலை நிலத்தை நீங்கள் தாண்டிச் சென்றால் கொடும்பாளூர், நெடுங்குளம் என்னும் இரண்டு ஊர்களுக்கும் நடுவே ஒரு பெரிய ஏரி காணப்பெறும். அந்த ஏரிக்கரையைத் தாண்டிச் சென்றால், பிறைத் திங்களை முடியிற் றாங்கிய சிவபிரானின் கையில் உள்ள முத்தலைச்சூலத்தைப் போல மூன்று பிரிவான வழிகள் காணப்பெறும்.

வலப் பக்கத்து வழி

அவ்வாறு காணப்பெறும் பிரிவுபட்ட வழியில் நீங்கள் வலப்பக்கத்து வழியாகச் செல்லுவீர்களாயின், அங்கே தலை விரிந்த வெண்கடம்பும் உலர்ந்த ஓமையும், தாள்பொரிந்த வாகையும், தண்டுலர்ந்த மூங்கிலும், நீர் வற்றிக் கரிந்து கிடக்கும் மரலும் காணப்பெறும். உண்ணும் நீர் காணாது மான்கள் நீர்வேட்கையால் வருந்தும் காடுகளும் காணப்பெறும். மறவர் ஊர்களும் வழியில் உள்ளன. இவைகளைக் கடந்து சென்றால், மலை நெல்லும் முதிர் கரும்பும், கொய் பூந்தினையும், செழித்த வரகும், உள்ளியும், மஞ்சளும், அழகிய கவலைக் கொடியும், வாழையும், கமுகும், குலை

தாழ்ந்த தெங்கும், மாவும், பலாவும் சூழ்ந்துள்ள பாண்டியனுடைய சிறுமலை விளங்கித் தோன்றும். அம்மலையை வலப்பக்கமாக்கி இடது பக்கத்து வழி யாலே நீவிர் மதுரைக்குச் செல்வீராக.

### இடப்பக்கத்து வழி

அவ் வழியே செல்லாமல் இடப்பக்கத்து வழியே சென்றால், சிறையினையுடைய அழகிய வண்டுகள் செவ்வழிப் பண்ணைப் போலப் பாடுகின்ற குளங்க ளோடும் தாழ்ந்த வயல்களோடுங் குளிர்ந்த பூஞ் சோலையோடும் அருஞ்சுரங்கள் பலவற்றையும் இடையே கொண்ட காட்டு வழியையுங் கடந்து அழ கர் திருமலையை அடைவீர். அங்கே மிகுந்த மயக்கத் தினைக் கெடுக்கும் பிலத்து வழி ஒன்று இருக்கிறது. அப் பிலத்தினுள்ளே தேவர்களால் போற்றப் படுகிற வியக்கத் தக்க முறைமையினையுடைய புண்ணிய சர வணம், பவகாரணி இட்டசித்தி என்னும் பெயர்களை யுடைய சிறப்புத் தங்கிய மூன்று பொய்கைகள் இருக்கின்றன.

### புண்ணிய சரவணம்

அவற்றுள் புண்ணிய சரவணம் என்னும் பொய் கையில் நீங்கள் நீராடுவீர்களாயின், விண்ணவர் தலைவனாகிய இந்திரனாற் செய்யப் பெற்ற சிறந்த ஐந் திர இலக்கண நூலின் அறிவினைப் பெறுவீர்.

### பவகாரணி

அப் புண்ணிய சரவண மன்றிப் பவகாரணியிற் படிந்து நீராடுவீ ராயின், இப் பிறப்புக்குக் காரண மான முற் பிறப்பிறப்பின் உணர்ச்சியைப் பெறுவீர்.

### இட்ட சித்தி

இட்டசித்தியில் முழுகி நீராடினுலோ நீங்கள் நுமக்கு விருப்பமான யாவற்றையும் பெறுவீர்.

### பிலவாயில்

அப் பிலத்தின்கண் நுழைய விரும்புவீராயின், மிக வுயர்ந்த அம்மலைக்கண் எழுந்தருளியுள்ள நெடியோனுகிய திருமாலை வணங்கிப் போற்றி அம்மலையை மூன்று முறை வலஞ்செய்தால், நிலம்பிளக்க வீழும் சிலம்பாற்றின் கரையில் மணமலர் பூத்து விளங்கும் ஒருகோங்கு மரத்தடியில் ஒரு பெண் தெய்வம் தோன்றும். அப்பெண் தெய்வத்தின் பெயர் வரோத்தமை. அவள் பொற்கொடி போன்ற அழகும், மின்னலைப்போன்ற விளக்கமும், முகிலைப்போன்ற கூந்தலும், வளைதங்கிய தோளும் உடையவள். அவள் இம்மைக்கு இன்பமும் மறுபிறப்பிற்கு இன்பமும், இம்மையின்பமும் மறுமையின்பமும் ஆகிய இரண்டு மல்லாமல் எக்காலத்தும் தூயதாய் அழிவில்லாது நிற்கும் இன்பமுமாகிய பொருள்களை நீவிர் கூறுமின் என்று கேட்பாள். அதற்குத் தக்க விடை யளித்தார்க்கு அப்பிலவாயிற் கதவைத் திறந்து உடனே வழிவிடுவாள். அவள் காட்டிய வழியே சென்றுல் பல இடைகழி வாயில்கள் தோன்றும். அவைகளையும் தாண்டிச் சென்றுல், இரட்டைக் கதவுள்ள வாயில் ஒன்று தோன்றும். அங்கே ஓர் அழகிய மங்கை தோன்றி, "முடிவில்லாத இன்பம் எது" என்று கேட்பாள். தக்க விடை கூருதவர்களை வருத்த மாட்டாள். அவர்கள் செல்லவேண்டிய வழியே செல்லச் செய்வாள். தக்கவிடைகூறினுல் முன் சொன்ன மூன்று பொய்கைக்கரைகளில் அவர்களைச்

சேர்த்துஅவற்றைப்பற்றிய செய்திகளையும்கூறுவாள். அருமறைக் கண்ணதாகிய ஐந்தெழுத்தையும் எட்டெழுத்தையும் ஒருமை மனத்துடன் நினைத்து அம் மூன்றுபொய்கைகளில் விரும்பிய ஒன்றில் நீராடினால், அரிய தவத்தினைச்செய்தார்க்கும் அரிதாகிய பயனைப் பெறலாம். அப் பொய்கைகளின் பயனை நீவிர் நினையாமல் அம்மலைமீ தெழுந்தருளிய மாயோன் அடியை நினைத்தால் அவனுடைய நீண்ட கலுழன் எழுதிய கொடிமரம் பொருந்தி நிற்கும் இடம் காணப்பெறும். அவ்வாறு கண்டால் அது உங்களுடைய பிறவித்துன்பத்தைக் கெடுக்கும். பின்னர் நீவிர் இன்பத்துடன் மதுரையை எய்தலாம்.

## இடைவழி

அவ்வாறில்லாமல் மேற்கூறிய முக்கிளைப் பாதையில் நடுப்பாதை வழியே சென்றால் அது நேரானவழியாகும். அவ் வழியிலே காடுகள் பலவற்றைக்கடந்து சென்றால் அவ்வழி யிடத்திலே துன்பத்தைத் தரும் ஒரு தெய்வம் இருக்கிறது. அத் தெய்வம் அழகிய வடிவோடு தோன்றித் துன்பஞ் செய்யாது வழிப் போவாரைத் தடுக்கும். அத் தெய்வத்திற்குத் தப்பிச் சென்றால் எளிதிலே மதுரையை அடையலாம். இம் மூன்று வழிகளில் உங்களுக்கு விருப்பமான வழியே செல்லுங்கள். யானும் நீண்ட உலகத்தைத் தாண்டியளந்த நெடுமுடியண்ணலின் அடிமலரைத் தொழுதல் வேண்டுமாதலின், செல்லுகின்றேன் என்று கூறினான்.

### கவுந்தியடிகள் பதில்

மறையோன் கூறிய வனைத்தையுங் கேட்டிருந்த கவுந்தியடிகள் அம்மறையோனைப் பார்த்துப், "பிற ருக்கு நலமே புரிய வேண்டுமென்னுங் கொள்கை யினை யுடைய நான்மறையாள! நீ கூறிய பிலத்தில் புக வேண்டிய வேலை எங்கட்கு இல்லை. ஏனெனின் இந்திரன் இயற்றிய ஐந்திர இலக்கணத்தை எம் முடைய அருகன் அருளிய பரமாகமங்களில் பரக்கக் காணலாம். ஆதலின் புண்ணிய சரவணத்தில் நீராட வேண்டியதில்லை. முற்பிறப்பிற் செய்த வினைப் பயனை இப்பிறப்பில் விளங்கக் காண வில்லையா? இதன் பொருட்டுப் பவகாரணியிலும் நீராட வேண் டுமோ? வாய்மை தவறாமல் மன்னுயிர்களைத் தம் முயிர்போல் மதித்துப் போற்றுவோர்க்கு அரிய பொருள்களும் உலகத்தில் உளவோ? ஆகவே இட்ட சித்திகளை எய்த வேண்டிய வேலை எமக்கில்லை. நீ விரும்பிய தெய்வத்தைக் கண்டு பணிதலுக்குச் செல்லுவாயாக. யாங்களும் நீண்ட வழிப்பயணத் தைத் தொடங்குகின்றோம்" என்று கூறினார். பின் னர் மூவரும் புறப்பட்டு வழிநடந்து அற்றைப் பக லிலே ஒரு நல்ல ஊரில் தங்கினார்கள்.

### இயக்கம் தரும் தெய்வம்

மறுநாள் புறப்பட்டு மறையோன் கூறிய முக் கிளைப் பாதையில் நடுப் பாதையைப் பற்றிச் சென்றார்கள். செல்லும்போது வழிநடந்த வருத்தத்தால் கவுந்தியடிகளும் கண்ணகியும் ஓரிடத் தில் தங்கினர். அப்போது கோவலன் தண்ணீரின்

பொருட்டு ஒரு பொய்கையைத் தேடிச் சென்று அதன் கரையிலே நின்றான். அப்போது முன்னர் மறையோன் கூறிய மயக்கந் தரும் தெய்வம் வயந்த மாலையின் வடிவைத்தாங்கி, 'மாதவி யிடத்துக் கொண்ட காதலினால் இவன் நமக்கும் அருள் செய்வான் என்று எண்ணிக் கோவலனை யடைந்து வருந் திப் பொய்க் கண்ணீர் உகுத்து அவன் முன் தாழ்ந்து நின்றது. மேலும் அத்தெய்வம் கோவலனை மயக் கும் எண்ணத்துடன் "மணமாலையில் நான் எழுதிய உரை பொய்யற்ற மெய்ம்மொழிகளேயாம். நீ கோவலனுக்கு அவைகளைத் தவறாகக் கூறி யிருப் பாய், அதனாலேதான் கோவலன் எனக்குப் பிரி வென்னும் கொடுமையைச் செய்தான்" என்று மாதவி மயங்கிக் கூறிப் பெருந் துன்பமடைந்தாள்.

"அருந்தவ முடையோரும், கற்றறிந்தோரும், நன்மை தீமைகளின் கூறுபாட்டை யுணர்ந்தோரும் உள்ளத்தை வருத்துவதாகிய நோய் என்று நினைத்து முகம் பாராது விட்டு விலகுகின்ற விலை மகளிர் களுடைய வாழ்க்கை மிகவும் இழிந்தது" என்று கூறிக் குளிர்ச்சி மிக்க கண்களால் வெள்ளிய முத்துக் கள் போன்ற நீரைச் சொரிந்து, மார்பினிடத்திலே வெள்ளிய நிலாவைப் போலத் திகழும் முத்து மாலை யைத் தன் கையினாலே பறித்துச் சிந்தினாள்; வெகுண்டு என்னையும் துறந்தாள். ஆகவே, நீங்கள் மதுரை மூதூருக்குப் புறப்பட்டுப் போவதை வழிக் கண் எதிர்ப்பட்டோரால் அறிந்து வாணிகச் சாத் தோடு வந்து உம்மைத் தேடித் துன்புற்றேன். நற் குணங்களை யுடையாய், நீ என்னை ஆதரிக்க வேண்டும்" என்று கூறிற்று.

இவ்வாறு வசந்தமாலை வடிவாக வந்த மயக்கும் தெய்வம் கபடக் கூத்தாடியதைக் கண்ட கோவலன் 'மயக்குந் தெய்வம் இப்பெருங் காட்டினிடத்தில் இருக்கின்றதென்று மாங்காட்டு மறையோன் கூறி ஞன் அன்றோ. அத்தெய்வத்தின் கூத்துப்போலும் இது' என்று எண்ணியவனாய் வஞ்சத்தைப் போக்கும் மந்திரத்தை நாவால் கூறினான், அவ்வாறு கூறுதலும் அம் மந்திரம் கொற்றவை மந்திரமாகலின், அவ் வன சாரியானவள் அஞ்சித் தன்னுடைய உண்மைத் தன் மையைக் கோவலனுக் குணர்த்திக் 'கண்ணகிக்கும் தவமூதாட்டியாகிய கவுந்திக்கும் என்னுடைய இந்தச் செய்கையைக் கூருதே' என்று கூறி மறைந்தாள். கோவலனும் தண்ணீர் எடுத்துக் கொண்டு மீண் டான். மிகுதியான வெய்யில் வீசியது. அவ் வெயிலில் நடத்தற்கு மூவரும் அஞ்சினர். அந் நெறிக்கண் ஒரு காளி கோவில் இருந்தது. மூவரும் அந்தக் காளி கோவிலின்கண் சென்று மறைவான இடத்தில் தங்கினர்.

## 12. வேட்டுவர் கூத்து

அப்போது தேவராட்டியின் மேல் தெய்வம் வந்துற்றது. அவள் மறவர்களனைவரும் வியக்கும் வண்ணம் மெய்ம்மயிர் பொடிக்கக் கைகளை உயர்த்தி ஊர் நடுவிலேயுள்ள பொதுமன்றத்தில் கால்களைப் பெயர்த்து ஆடினாள். தெய்வம் வந்துற்ற அத்தேவ ராட்டியானவள், பழங்கடன் கொடாமையின் ஒலி யினையுடைய பகைவரது பெரிய ஊர்க்கண்ணே

ஆன் நிரைகள் திரண்டுமிருந்தன. பகைவரையழிக்கும் வலிய வில்லினைக்கொண்ட மறவருடைய மன்றுகள் பாழ்பட்டன. மறக்குடியிற் பிறந்த உரிமையையுடைய மறவரும் வழிச்செல்வோர் பறிக்கும் வளம் மிகுதியாகப் பெருது அறவோர் குடிப் பிறந்தோர் போலச் சினங் குறைந்து செருக்கு அடங்கிவிட்டனர். கலையாகிய ஊர்தியினையுடைய கொற்றவை தான் கொடுத்த வெற்றியின் விலையாகிய உயிர்ப் பலியைப் பெற்ருல் அல்லது நுமது வில்லிற்குப் பொருந்திய வெற்றியினைக் கொடுக்கமாட்டாள். வழிச்செல்வாரைக் கொள்ளையடித்துண்ணும் மறவர்காள், நீவிர் கள்ளுண்டு களிக்கும் வாழ்க்கையினை விரும்புவீராயின் கொற்றவைக்குரிய கடனைக் கொடுப்பீராக என்று கூறினுள்.

பின்னர் மறவரது குடியிற் பிறந்தாளாகிய ஒரு குமரியைக் கொற்றவை போலக் கோலஞ்செய்தனர். அப்பெண்ணின் நெருங்கிய கூந்தலை நெடுமுடியாகக் கட்டினர். அதில் பாம்புக்குட்டி போலாக்கிய பொன் நாணைச் சுற்றினர். காவல் பொருந்திய தோட்டப்பயிரை யழித்த பன்றியின் வளைந்த கொம்பை ஒடித்து இளம்பிறை போலச் சூட்டினர். புலி வாயைப் பிளந்து பெற்ற பல் வரிசைகளைத் தாலியாகக் கோத்து அணிந்தனர். வரியும் புள்ளியும் உடைய புலித்தோலை மேகலையாக வுடுத்தினர். கரு வில்லை வளைத்துக் கையில் கொடுத்தனர். முறுக்குக் கொம்பினையுடைய ஆண் மான் மேல் அக்குமரியை ஏற்றினர். மதனப்பாவை, கிளி, அழகிய சிறகினையுடைய காட்டுக் கோழி, நீல நிறம் பொருந்திய மயில், பந்து, கழற்சிக்காய் ஆகியவற்றைக் காணிக்கை

யாகத் தந்து போற்றினர். வண்ணக் குழம்பும் பொற்பொடியும் குளிர்ந்த மணமுள்ள சந்தனமும் அவரை துவரை முதலிய புழுக்கலும், எள்ளுருண்டை, நிணச்சோறு, பூ, அகிற்புகை முதலிய வாசனைகளும் ஆகிய இவற்றை ஏவல் புரியும் எயிற்றியர் ஏந்திப் பின் சென்றனர். வழி பறிக்குங்கால் அடிக்கும் பறையும், சூறையிடுங்கால் ஊதும் சின்னமும் கொம்பு, குழல், எறி மணி ஆகியவைகளும் மிகுதியாக ஒலித்தன.

வீரருக்கு வெற்றி கொடுத்து அவர் கொடுக்கும் பலியுண்ணும் கொற்றவைக்குச் சாலினி சிறப்புச் செய்து கை தொழுது வணங்கினாள். அவள் மேல் காளியின் ஆவேசம் வந்தது. அப்போது அவள் கணவனுடன் அங்கிருந்த, கண்ணகியைக் கண்டு, 'இப் பெண் கொங்கு நாட்டிற்குச் செல்வமாயுள்ளவள். குடமலை நாட்டினை ஆளும் செல்வி. தென் தமிழ் நாட்டின் பாவை. உலகினர் செய்த தவத்தின் கொழுந்து போன்றவள். இவ்வுலகிற்கு ஒப்பற்ற முழு மாணிக்கம் போன்று உயர்ந்த அழகிய பெண் மணி' என்று கண்ணகியின் எதிர்கால நிகழ்ச்சியினைத் தனது தெய்வ ஆவேசத் தன்மையாலே உணர்ந்து கூறினாள்.

சாலினியின் கூற்றைக் கேட்ட கண்ணகி இம் மூதறிவாட்டி மயக்கத்தினாலே இவ்வாறு கூறினாள் என்று எண்ணி நாணித் தன்னுடைய கணவன் பக்கத்தே சென்று மறைந்து கொண்டாள்.

பிறையாகிய வெள்ளிய இதழைச் சூடும் சென்னியினை யுடையாள்; நெற்றியினைத் திறந்து விழித்த இமையாத கண்ணினையுடையாள்; பவளம் போன்ற

வாயினையும் வெள்ளிய ஒளி பொருந்திய நகையினையு முடையவள். நஞ்சினையுண்டதனுற் கறுத்த கண்டம் உடையவள். கொடிய சினத்தினையுடைய வாசுகி என்னும் பாம்பாகிய நாணைப் பூட்டி நெடிய மேரு வாகிய வில்லை வளைத்தவள். நஞ்சு பொருந்திய துளை யுள்ள எயிற்றினையுடைய பாம்பாகிய கச்சையணிந்த கொங்கையினையும் உடையாள். வளையல் அணிந்த கையில் சூலத்தை யேந்தினவள். யானையின் தோலைப் போர்த்துச் சிங்கத்தின் தோலை மேகலையாக வுடுத்திய வள். வாளினையுடைய கொற்றவை. எருமை முக முடைய அசுரனது தலையின் மீது நின்றவள்; யாவரா லும் வணங்கப் பெறும் இறப்பில்லாதவள்; இளமை பொருந்தியவள்; பச்சை நிறத்தை யுடையவள்; போ ரில் வல்லவள்; திருமாலுக்கு இளையவள்; தலைவி; திரு மகள்; கலையை ஊர்தியாக வுடையவள்; ஆராயும் கலை களை உணர்ந்த பாவை; பசிய வீரவளையை அணிந்த வள்; அரிய அணிகலன்களை யணிந்த பாவைபோல் வாள். திருமால் நான்முகன் முதலியோர் வணங்கத் தோன்றிய கன்னியின் கோலத்தினையுடைய,யாவரும் விரும்பும் குமரியும் இவள் கொண்ட கோலம் வாய்ப் புடையது என்று கூற அருளினுள். வேடர்கள் காளி யைப் போற்றிப் பலவிதமாகப் பாடியாடிக் கூத்தாடி னுர்கள். கோவலன் கண்ணகி கவுந்தியடிகள் மூவரும் ஆங்குநின்றும் புறப்படலானுர்கள்.

---

# 13. புறஞ்சேரியில் தங்குதல்

கோவலன் கவுந்தியடிகளைப் பார்த்து "அடிகாள்! கண்ணகி கடுங்கதிர் வேனிலைப் பொறுக்கமாட்டாள். பருக்கைக் கற்கள் நிறைந்த பாலை நிலத்தில் இவளது சிறிய அடிகள் பொருந்தா. ஆதலின் பகற்காலத்தில் வழிநடப்பதை விட்டு, நிலாப் பொருந்திய இரவில் வழிநடப்பதே நன்மையாகும். இரவில் வழிநடப்ப தால் ஏதம் யாதும் இல்லை. கரடியும் புற்றினைத் தோண்டாது; புலியும் மான் கூட்டத்தோடு மாறு படாது. அரவும் சூரும் முதலையும் தம்மைச் சேர்ந்த வர்கட்குத் துன்பஞ் செய்யமாட்டா. யாதுஞ் லோ எனின், இந்நாடு செவ்விய கோலையுடைய பாண்டிய னுல் ஆளப் பெறுகிற கீர்த்தியையுடையதென்று புக ழப்படுதலான்," என்று கோவலன் கூறினன். இர வில் வழிநடத்தற்குக் கவுந்தியடிகளும் ஒருப்பட்ட னர். எனவே, கொடுங்கோல் அரசன் ஒழியுங் காலத்தை எதிர் நோக்கியிருக்கும் அவனுடைய குடி கள் போல ஞாயிறு மறையுங் காலத்தை எதிர்பார்த் திருந்தார்கள். பலவகைப்பட்ட உடுக்கணங்களாகிய படையோடு வெண் கதிர்களை விரித்துக்கொண்டு பாண்டியர் குலத்திற்கு முதல்வனுகிய திங்கட் செல் வன் தோன்றினன். நிலமகள் தான் எறிந்த பெரு மூச்சு அடங்கினள். மூவரும் புறப்பட்டார்கள். கோவ லன் வழிநடை வருத்தத்தால் துன்பமுற்று வரும் கண்ணகியைப் பார்த்து, இவ்வழிக்கண் புலிகள் சுற் றித் திரியும். பேராந்தை கூப்பிடும். கரடி முழங்கும். இவற்றிற்கு நடுங்காது வருவாயாக என்று கூறி, வளை யணிந்த கண்ணகியின் சிவந்த கையைத் தன் தோளின்

மீது சார்த்திக்கொண்டு கவுந்தியடிகளின் அறவுரையைக் கேட்டு வழிநடை வருத்தந் தோன்றாது சென்றான்.

காட்டுக் கோழிகள் ஞாயிற்றின் வருகையைத் தெரிவித்தன. விடியுங் காலத்தில் மூவரும் பார்ப்பனர் வதியும் ஓர் ஊரைக் கிட்டினர். அவ்வூர்ப் பார்ப்பனர் மறையோதுதல் வழுக்கிய வாழ்க்கையை உடையவர்களாக விருந்தமையின், அவ்வூருக்குள் நுழையாது, பக்கத்திலிருந்த ஒரு பாதுகாப்பான இடத்தையடைந்து தங்கினார்கள்.

மாதவி யனுப்பிய கௌசிகன்

ஆங்குக் கண்ணகியையும் கவுந்தியடிகளையும் இருக்கவைத்துவிட்டுக் கோவலன் காலைக் கடன் கழிக்கும்பொருட்டு ஓரிடத்தை யடைந்தான். அப்போது மாதவியால் அனுப்பப்பெற்ற கௌசிகன் என்பவன் கோவலனைத் தேடிவந்து அந்த இடத்திலே கண்டான். கோவலன் உள்ளமும் உடலுஞ் சோர்ந்து மெலிந்திருந்தமையின், கோசிகனுக்கு அவன் கோவலனோ அல்லனோ என்று ஐயமேற்பட்டது. அவன் அவ்வையத்தை நீக்கிக்கொள்வதற்கு ஓர் உத்தி செய்தான். ஆங்கு ஒரு மாதவிக் கொடி வெய்யிலால் வாடி வதங்கி நின்றது. கோசிகன் அந்தக் குருக்கத்திக் கொடியைப் பார்த்துக் கோவலனுடைய காதுகளுக்குங் கேட்கும்படியாக, "ஓ மாதவியே! தன்னைக் கோவலன் பிரிதலானே மிக்க துன்பத்தினை யடைந்த நெடிய கண்களையுடைய மாதவியைப்போல, மிகுந்த வெம்மையினையுடைய இந்த வேனிற் காலத்து வெய்யிலால் வருந்தி இளைத்தாயோ?" என்று

கூறினன். கோசிகன் அவ்வாறு கூறியதைக்கேட்ட கோவலன் அவனைப் பார்த்து 'நீ இவ்வாறு கூறியதன் பொருள் யாது?', என்று கேட்டான். உடனே கௌசிகன் இவன்தான் கோவலன் என்றறிந்து மகிழ்ந்தான். அவனிடஞ் சென்று தான் வந்ததைக் கூறினன். கோவலனின் தந்தையாகிய இருநிதிக் கிழவனும் தாயாகிய பெருமனைக்கிழத்தியும் அருமணி இழந்த பாம்பினைப்போன்று இருத்தலையும், உற்ற உயிரினை யிழந்த உடலினைப்போன்று சுற்றத்தார் முற்றவும் துயர்க்கடல் ஆழ்ந்திருத்தலையும், கண்ணகி யின் தந்தை கோவலனைத் தேட ஏவலாளர்களை யாங்கணும் அனுப்பியதையும் கூறினன். மேலும் இராமனைப் பிரிந்த அயோத்தியைப் போன்று காவிரிப்பூம்பட்டின மக்கள் கவலுதலையும், வசந்த மாலையிடம் அனுப்பிய திருமுகத்தை மறுத்ததை யுணர்ந்த மாதவியின் செய்தியையும், அவளைத்தான் பார்க்கச்சென்றபோது அவள் தன்பால் திருமுகம் அனுப்பிய செய்தியையும், தான் பலவிடங்களிலும் தேடி முடிவில் அவ்விடத்தில் கோவலனைக் கண்டமை யையும் உரைத்து, மாதவியின் திருமுகத்தைக் கோவலனிடம் கொடுத்தான். கோவலன் அத் திரு முகத்தைப் படித்துப் பார்க்கலானன். அத் திருமுகத் தில்,"அடிகள் முன்னர்யான் வணக்கம் புரிகின்றேன். தெளிவில்லாத என்னுடைய புன்மொழிகளை உள்ளத் திற் கொள்ளுதல் வேண்டும். தாய் தந்தையருக்குப் பணிசெய்தலை விட்டதல்லாமல் உயர் குலத்தில் பிறந்த வளாகிய மனைவியோடு இரவிலே ஊரை விட்டு நீங்குதற்கு யான் செய்த தவறு யாது? அத்தவற்றினை யறியாமையின் என் உள்ளம் வருந்துகின்றது. குற்ற

மற்ற அறிவினையுடையோய்! என்னைக் காப்பாற்று வாயாக'' என்று எழுதப்பட்டிருந்தது. இதனைப் படித்துணர்ந்த கோவலன் மாதவி மாசற்றவள். யானே பிழைபட எண்ணிவிட்டேன் என்று தளர்ச்சி நீங்கினான்.

பின்னர்க் கோவலன் கோசிகனை நோக்கி, 'இம் முடங்கலில் எழுதியுள்ள செய்தி யான் என் இருமுது குரவருக்கும் அனுப்பக் கூடியதாக விருக்கிறது. ஆதலின், இவ்வோலையினையே என் தாய் தந்தையர் கட்குக் கொடுத்து, யான் அவர்களை வணங்கினேன் என்று கூறி அவர்களது துன்பத்தினைப் போக்குவா யாக' என்றுகூறிக் கோசிகனை அனுப்பிவிட்டுக் கண்ணகியும் கௌந்தியடிகளும் இருக்கும் இடத்தை யடைந்தான். அங்குப் போந்திருந்த பாணர்களோடு சிறிது போது அளவளாயிருந்தான். பின்னர் மதுரையை நெருங்கிவிட்டதாக அவர்களால் அறிந் தான்.

## மதுரை சேர்தல்

பின்னர் மூவரும் ஆங்குநின்றும் பெயர்ந்தனர். மதுரைமா நகரின் பலவகை யொலிகளும் எதிரொ லித்து இவர்களுடைய துன்பத்தைப் போக்கிற்று. பலவகைச் சிறப்பும் பொருந்திய வைகையாற்றை மூவரும் வணங்கினர். வைகையாற்றைக் கடந்து செல்லுதற்குக் குதிரைமுக ஓடம் யானைமுக ஓடம் சிங்கமுக ஓடம் ஆகிய பலவகை ஓடங்கள் காணப் பெற்றன. மூவரும் இவைகளில் ஏறி வைகையின் தெற்குக் கரையினை யடைந்தனர். மதுரை நகரின் மதிலின்கண் கட்டப்பெற்றிருந்த நீண்ட கொடிகள்

காற்றில் அசைந்தது கோவலனைப் பார்த்து இங்கு வராதே; வரின் துன்பமுறுவாய் என்று கூறுவது போல இருந்தன. பறவைகள் தங்கி அழகு செய்யும் வயலும் சோலைகளும் பொருந்தப்பெற்று மிக அழகோடு விளங்கிய மதுரையின் புறநகரிலே மூவரும் தங்கினர்.

## 14. ஊர் காண்டல்

மறுநாட் காலை ஞாயிறு தோன்றிற்று. மதுரைமா நகரந் துயிலின் நின்றும் எழும்பிற்று. நெற்றிக் கண்ணினையுடைய சிவன் கோயிலிலும், கருடக் கொடியினையுடைய திருமால் கோயிலிலும், கலப்பைப் படையினையுடைய பலராமன் கோயிலிலும், சேவற்கொடியினையுடைய முருகன் கோயிலிலும், அறத்துறையில் நிற்கும் முனிவர்களுடைய பள்ளிகளிலும், அரசனது அரண்மனையிலும் வெள்ளிய சங்கோடு காலை முரசம் ஒலித்தது. கோவலன் எழுந்து தனியே தங்கியிருந்த கவுந்தியடிகளைச் சென்று கண்டு வணங்கினன். தன்னுடைய குறைகளை யெல்லாம் கூறினன். தான் நகருக்குட் சென்று மீளும்வரை கண்ணகியைப் பார்த்துக் கொள்ளுதல் வேண்டுமென்று வேண்டிக்கொண்டான்.

கவுந்தியடிகள் கோவலனைப் பார்த்து, "ஒவ்வொருவரும் பாவ நெறியிலிருந்தும் விலகியிருத்தல் வேண்டும். அவ்வாறு நீங்காதிருப்பின் செய்கின்ற பாவச் செயல் தன்னுடைய பலனை ஊட்டுவிக்கும். அறத்துறையில் ஒழுகும் நல்லறிவாளர்கள் ஒவ்வொருவருக்குந் தக்கபடி தம்முடைய வாயே பறையாகவும் நாவே குறுந்தடியாகவும் வாய்ப்பறை யறைந்து நன்

னெறியை நவின்றாலும், உறுதியற்ற மனத்தினை
யுடைய மாக்கள் அவ்வறவுரையினை யேற்றுக்
கொள்ளமாட்டார்கள். பின்னர்த் தீப்பயனையுடைய
கொடியவினையானது தோன்றித் தன் துன்பப்பயனை
ஊட்டுங் காலத்தில், தம் அறியாமையினாலே மிகுந்த
வருத்தத்தை யடைவார்கள். நல்லறிவாளர்கள்
போக்குதற்கு முடியாத தீவினைப் பயனாகிய துன்பத்
தினை யனுபவிக்குங் காலத்தில் வருத்தத்தினை யடைய
மாட்டார்கள்.

மகளிரைப் பிரிதலால் உண்டாகும் துன்பமும்
அவரைச் சேர்தலால் உண்டாகும் துன்பமும், காமன்
வருத்துந் துன்பமும் மாதரை விரும்பி மயங்கினார்க்
கல்லது ஒப்பற்ற தனியாற்றலையுடைய அறிஞர்
கட்கில்லை. இவ்வுலகத்திலே பெண்டிரும் உண்டியுமே
இன்பந்தரத்தக்க பொருள்களாமென்று துணிந்த
அறிவில்லாதவர்கள் அடையும் பெரிய தொல்லை
யினைக் கண்ட முனிவர்கள் அவற்றினைத் துறந்
தார்கள். காமமே பற்றுக்கோடாக அன்புகொண்டு
வருந்திக் கரைகாணாத் துன்பத்தினை யடைந்தவர்கள்
இக்காலத்தல்லாமல் முற்காலத்திலும் பலர் இருந்
தனர். தந்தையின் கட்டளைப்படி தன் மனைவியுடன்
காட்டிற்குச் சென்று அவளைப் பிரிந்து மிகுந்த
துன்பத்தினையடைந்தவன் நான்முகனைப் பெற்ற திரு
மால் என்பதை நீ யறியாயோ? அச் செய்தி அனைவ
ரும் அறிந்ததன்றோ? அன்றியும் புட்கரனோடு சூதாடி
அரசினை யிழந்து காதலியோடு கடுங் காட்டை
யடைந்தவனாகிய நளன் காரிருளில் காரிகையை விட்டு
நீங்கச் செய்தது கடுவினையன்றோ? நான் அவ்வாறு

பிரிந்தது தமயந்தியின் தவறென்று சாற்ற முடியுமோ? நீ இராமனைப் போன்றும் நளனைப் போன்றும் காதலி யைப் பிரிந்தவனு மல்லன். காதலியைப் பிரியாத வாழ்க்கை பெற்றிருக்கின்றாய். ஆதலின், வருந்தாது நகருக்குட் சென்று தங்குவதற்குத் தக்க இடத்தைத் தெரிந்து வருவாயாக" என்று கூறியருளினார்.

கவுந்தியடிகளிடம் விடைபெற்ற கோவலன் நக ருக்குள் நுழைந்து தேவர் கோமானாகிய இந்திரனது அணிகலன்கள் வைக்கப் பெற்ற பேழையின் வாய் திறப்பதைப் போன்ற எல்லையைக் கண்டான். மது ரைமா நகரின் பேரழகு கோவலனுடைய உள்ளத் தைக் கொள்ளைகொண்டது. மேல் காற்றின் விசை யினால் மாளிகைகளின் கொடிகள் அசைந்தாடின. வைகைக்கரையில் உள்ள சோலையில் காதலர்களுடன் பொதுமகளிர்கள் நாவாயிற் செல்லுகின்றனர். தெப் பக் கட்டையைத் தழுவி நீர் விளையாடுகின்றனர். குளிர்ந்த மணமுள்ள முல்லை, கண் போன்ற நெய்தல் நீரில் மலரும் குவளை ஆகியவற்றைக் கூந்தல் நிறையுமாறு செருகி, மல்லிகையும் செங்கழுநீர் இதழ் களும் பொருந்தத் தொடுத்த மாலையுடன் கொற்கைத் துறையினின் றெடுத்த முத்துமாலையு மணிந்து, சந்த னத்தை நன்கு பூசி மகளிர்கள் நடுப்பகலில் பொழில் களில் விளையாடுகின்றனர். அவர்கள் ஆடியயிளைத்த கோலத்தை அவர்களுடைய காதலர்கள் வியக்கின்ற னர். பிறகு மகளிர் தம்மை அழகு படுத்திக்கொள்ளு கின்றனர். இன்னும் பல வகையான காட்சிகளும் கோவலன் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுமாறு விளங்குகின்றன.

மறையோர், அரசர், வணிகர், வேளாளர் என்பார் இருக்கும் தெருக்களும் முச்சந்தியும் நாற் சந்தியும் கடைத்தெருவும் மன்றுகளும், பல நெறிகள் கூடிய முடுக்குகளும் சிறிய தெருக்களும் சுற்றித் திரிந்து ஞாயிற்றின் கதிர்கள் நுழையப்பெறாத சிறு கொடியும் பெருங்கொடியும் என்னும் இவற்றின் பந்தர் நிழலிலே பாண்டிய மன்னனது பெரிய நகரினைக் கண்டு மகிழ்ந்து கோவலன் கௌந்தியடிகளும் கண்ணகியும் தங்கியிருக்கும் இடத்திற்கு மீண்டான்.

## 15. அடைக்கலம்

மதுரைமா நகருக்குட் சென்று சுற்றிப்பார்த்து மீண்ட கோவலன், மதுரைமா நகரின் மாண்பனைத்தையும் கௌந்தியடிகளுக்குக் கூறினான். அப்போது காவிரிப்பூம் பட்டினத்திற் கருகேயுள்ள தலைச்செங்கோடு என்னும் ஊரைச் சேர்ந்தவனாகிய மாடலன் என்னும் பார்ப்பான் கன்னியாகுமரித் துறைக்குச் சென்று நீராடிவிட்டுத் திரும்பிவரும் வழியில் வழிவருத்தம் நீங்கும்பொருட்டுக் கோவலன் கௌந்தியடிகள் கண்ணகி ஆகியோர் தங்கியிருந்த பொழிலின்கட் சென்று தங்கினான். ஆங்குக் கவுந்தியடிகள் வந்திருத்தலை யறிந்து அவ்வடிகளைச் சென்று கண்டான். அம்மாடலன் வந்த செய்தியை யுணர்ந்த கோவலன் அம்மாடலனைச் சென்று கண்டு வணங்கினான். மாடலன் கோவலனது அப்பொழுதைய நிலைமையை யெல்லாம் நன்குணர்ந்து காவிரிப்பூம் பட்டினத்தில் கோவலன் செய்த மேதகு காரியங்களை

யெல்லாம் கூறி, 'அத்தன்மையை உடைய நீ இவ்வாறு இழிநிலையை எய்தியுள்ளாயே' என்று வருந்தினன். மாடலன் கோவலனைப்பற்றி நினைவு மூட்டிய செய்திகள் வருமாறு.

### மணிமேகலை என்று பெயரிட்டது

அரசனால் மிகுந்த சிறப்பினை யடைந்த மாதவி யானவள் ஒரு பெண் குழந்தையைப் பெற்று அதற்குப் பெயரிடத் தொடங்கிய காலையில், முன்னாளில் இருள் நிறைந்த நடுயாமத்தில் அலைமோதும் பெரிய கடலினிடத்தே மரக்கலம் உடையப்பெற்ற எம் முன்னோன், கரையை அடையும் வழியின்றியே நல்வினைப் பயனால் சில நாள் நீந்திக்கொண்டு கிடக்க, அப்போது ஒரு தெய்வம் தோன்றி, 'நான் மணிமேகலை எனப்பெறுவேன். இத்தீவில் உள்ளாரை அசுரர்கள் வருத்தா திருத்தற் பொருட்டு இந்திரன் கட்டளையால் இங்கு வாழ்ந்துகொண் டிருக்கின்றேன். நின்றுயரினை ஒழிக்க அவ்விந்திரனது ஏவலால் இங்கு வந்தேன்; நீ அஞ்சற்க. நீ செய்த பெரியதானத்தின் பயன் நின்னைவிட்டுப்போகாது. ஆதலின் கடலில் நீந்திய துன்பக்கடலை ஒழிவாயாக' என்று கூறி மந்திர வலிமையினாலே மீண்டும் கரையை அடையச் செய்தது. அத்தெய்வமே எமது குல தெய்வம். அதன் பெயரையே இந்தக் குழவிக்கு நீங்கள் இடுங்க, ளென்று கூறினாய்.

### மறையவனைக் காத்தது

அழகிய மேகலையை அணிந்த பலர் கூடி அவ்வாறே பெயரிட்டுக் குழந்தையை வாழ்த்தியபோது மாதவியோடு சேர்ந்து பல வகையான அறங்களைச்

செய்தாய். அப்போது வீடடையத்தக்க நல்ல அறிவினையுடைய ஒரு மறையோன் தருமத்தைப் பெறும் பொருட்டுத் தளர்ந்த நடையுடன் ஊன்றுகோலையே காலாக ஊன்றி வந்தான். வளைந்த உடலினையுடைய அந்த மறையவனை மதங்கொண்டு வருகிற ஒரு யானையினைத் தோடு பற்றிக்கொண்டது. அப்போது நீ விரைந்து சென்று அம்மறையோனை மீட்டு அவ் யானையின் கொம்பைப் பற்றி அதன் பிடரியின் மீது தாவி அந்த யானையின் மதத்தை அடக்கியருளினாய்.

பார்ப்பனியைக் காப்பாற்றியது

பிள்ளையைக் காத்த கீரியைத் தன் மனைவி அடித்துக் கொன்றமை காரணமாகத் துறந்து செல்கின்றவன் கொடுத்த பட்டிகையைக் கைக்கொண்டு 'பாவத்தினைப் போக்கும் பயனைக் கொள்ளுங்கள்' என்று கூவிச்செல்லும் பார்ப்பனியை அழைத்து அவளடைந்த துன்பத்தினைக் கேட்டுக் கொலைத் தொழில் புரிந்தவளாகிய அப்பார்ப்பனி செய்த பாவம் ஒழியும்படி தான தருமங்களைச் செய்து அவளுடைய துன்பத்தினைப் போக்கி அவள் கணவனை யழைப்பித்து மிகுந்த பொருளைக் கொடுத்து அவர்களை நல்வழிப் படுத்தினாய்.

கீழோனைக் காக்க முயன்று அவன் குடியைக் காத்தது

அன்றியும் கற்புடைய காரிகை ஒருத்தி பொய்ப் பழியினையடையுமாறு அறிவிலான் ஒருவன் பொய்ப் பழி ஒன்றினை அம்மாதின் கணவனிடத்துக் கூறியமையின், தீயோர்களைக் கொன்று தின்னும் பூதசதுக்கத்திலுள்ள பூதத்தினுடைய பாசத்தினிடத்திலே அகப்பட்டுக் கொண்டான். அவனுடைய தாய்

மிகுந்த வருத்தத்தினை யடைந்து நொந்தாள். நீ அவ ளுடைய துன்பத்தினைப் போக்குமாறு, அவனைக் கட்டிய பாசத்தினுள் நீ விரைந்து சென்று, 'என்னு டைய உயிரைப் பெற்றுக்கொண்டு இவனுடைய உயிரை விட்டுவிடுவாயாக' என்று கூறினாய். அப் பூதமோ,

"நரகன் உயிர்க்கு நல்லுயிர் கொண்டு
பரகதி இழக்கும் பண்பீங் கில்லை"

என்று கூறி,அவனை உன் எதிரிலேயே கொன்றுதின்று தீர்த்தது. நீ அவனுடைய குடியிலுள்ளார்க்குப் பேரு தவி புரிந்து பல்லாண்டு காப்பாற்றினாய். இவ்வாறு நீ பலருக்கும் செய்த உதவிகள் பல. நான் அறிந்த வரையில் நீ இப்பிறவியிற் செய்தனவெல்லாம் நல் வினையே யாகும். அவ்வாறாகவும் நீ தனிமையாக இம் மெல்லியலாளுடனே இவ்வாறு வந்தது முற் பிறவி யிற் செய்த தீவினையே யாகும் என்றான்.

## கோவலன் கனவுரைத்தல்

இவ்வாறு கூறித் தன் பொருட்டு வருந்திய மாடலனைப் பார்த்துக் கோவலன் கூறுவான். "இன்று அதிகாலையில் யான் ஒரு தீய கனாக் கண்டேன். அஃதென்ன வெனின், பாண்டியனுடைய இந்த மதுரைமாநகரின்கண்ணே கீழ்மகன் ஒருவனால் கண்ணகி மிகுந்த துன்பத்தினை யடைந்தாள். நான் உடுத்திருந்த ஆடை பிறரால் பற்றிக்கொள்ள, யான் எருமைக்கடாவின் மீது ஏறி அதனைச் செலுத் தினேன். நான் இந்தக் கண்ணகியோடு பற்றினை யறுத்த துறவிகள் பெறும் பெரும் பேற்றினை யடைந்தேன். காமன் செயலற்று ஏங்கும்படி மணி

மேகலையைப் புத்தவிடத்திலே மாதவி கொடுத்தாள். இத்தகைய தீக் கனவினால் எனக்கு இப்பொழுதே யாதேனும் தீங்கு நேருமோ என்று அஞ்சுகிறேன்" என்று கூறினான்.

கோவலனை நோக்கி மாடலனும் கவுந்தியடிகளும் 'இப்புறஞ்சேரியானது முனிவர்களுக் கல்லது மற்ற வர்களுக்கு ஆகாது. ஆதலின், நீ இவ்விடத்தில் தங்குதல் ஒழிந்து விரைவில் நகருக்குட் புகுவாயாக' என்று கூறினார்.

மாதரி வரவு

அப்பொழுது அவ்விடத்திற்கு மாதரி என்னும் ஆய்ச்சி ஒருத்தி வந்தாள். அந்த ஆய்ச்சி மதிற்புறத்தின்கண் எழுந்தருளியுள்ள இசக்கிக்குப் பால்சோறு பொங்கலிட்டுவிட்டுத் திரும்பி வந்துகொண்டிருந்தாள். அவள் கௌந்தியடிகளைக் கண்டு வணங்கினாள். இவ்வாய்ச்சி இடையர் குடியிலே பிறந்தவள். இந்த மாதரியைக் கண்டதும் கௌந்தியடிகள் கண்ணகியை இவள் பாதுகாப்பில் விடலாம் என்று எண்ணினார். அவர் மாதரியைப் பார்த்து, ஓ மாதரியே, கேட்பாயாக! கண்ணகி யென்னும் இப் பெண்மணியினுடைய மாமனது பெயரைக் கேட்டால், அவனது குலத்திற் பிறந்த இந்த நகரத்திலுள்ளோர் பெறுதற்கரிய செல்வத்தினைப் பெற்றவர்களைப் போல மகிழ்ந்து, இவர்களைத் தங்கள் விருந்தினராக ஏற்றுக் கொள்வர். அவ்வாறு இவர்கள் செல்லும் வரையிலும் இடையர் குலப் பெண்ணாகிய நினக்கு இவளை அடைக்கலமாகத் தந்திருக்கின்றேன். இவளுடைய தாயைப்போல இவளை நீ பாதுகாப்பாயாக. இவள்

சிறந்த கற்புடையா ளாவள். கற்புடைத் தெய்வ
மாகிய இத்தெய்வமல்லாது யாம் வேறு தெய்வம்
அறியேம். கற்புடைப் பெண்டிர் உள்ள நாட்டிலே
பருவமழை தப்பாது. அரசனுடைய வெற்றி அழிவு
ருது. இதனை நீ அறிவாயன்றோ? தவத்தோர் தரும்
அடைக்கலப் பொருளைக் காத்தல் எளிதாக இருப்
பினும் அதனால் உண்டாகும் நன்மை பெரிதாம்.

குரங்குக்கைத் தேவன்

காவிரிப்பூம் பட்டினத்தில் அசோகமர நிழலின்
கண் இரண்டு சாரணர்கள் தருமோபதேசம் செய்து
கொண்டிருந்தார்கள். அப்போது அந்த இடத்திற்குத்
தேவன் ஒருவன் வந்து தோன்றினான். அவன் வான
வில்லைப்போல ஒளிவிட்டு விளங்குகின்ற உடலை
யுடையவனாயிருந்தான். பூமாலையையும் மணிமாலை
யையும் பொன்னாற் செய்த அணிகலன்களையும்
உடையவனாக இருந்தான். அவன் தெய்வத் தன்மை
பொருந்திய வடிவுடையவனாக விருந்தும் அவனு
டைய ஒருபக்கத்துக் கை குரங்கின் கையாக இருந்
தது. உலக நோன்பிகள் யாவரும் சாரணரைத்
தொழுது இவ்விடத்திற்கு இத்தேவன் வந்தது எத
னைக் கருதி யென்று கேட்கச், சாரணர் தலைவன்
கூறுகின்றான்:

எட்டிப் பட்டத்தினையுடை சாயலன் என்பவ
னது பட்டினி விட்டுண்ணும் விரதிகள் பலரும் வந்து
சேர்கின்ற இல்லத்தின்கண், ஒருமாதவ முதல்வனைச்
சாயலனுடைய மனைவி எதிர்கொண்டு செய்ய வேண்
டுவன செய்யும் சமயத்தில் அவ்வூர்க்கண்ணுள்ள ஒரு
சிறிய குரங்கு அச்சத்தோடு அம்மனையிற் புகுந்து.

அம்மாதவனுடைய அருளடிகளை அண்மி அவன் அயின்றகற்றிய அடிசிலையும் நீரையும் அயின்று அவன் எதிரே அமர்ந்து அவன் முகத்தை அன்பொடு நோக்கியது. அக்குரங்கின் தன்மையை அம்மாதவனும் விரும்பி அம் மனைக்கிழத்தியைப் பார்த்து 'இக்குரங்கினை, நின் மக்களைக் காப்பாற்றுவதைப் போலக் காப்பாற்றுவாயாக' என்றுரைத்தான். அப் பெரியோன் அருளிய அறவுரையைக் கேட்ட ஆய்தொடியும் அவ்வாறே அதனைப் போற்றிக் காத்தாள். அக்குரங்கு இறந்த பின்னரும் தான் தருமஞ் செய்யும் போது 'அக்குரங்கு அதன் இழிய பிறவியினின்றும் அகலுக' என்று அக்குரங்கிற்கு ஒரு பகுதி அறத்தினைச் செய்துவந்தாள். அவ்வறப் பயனால் அக்குரங்கு காசி மாநகரின்கண் உத்தர கௌத்தன் என்னும் ஒருவனுக்கு ஒப்பற்ற புதல்வனாகப் பிறந்து உருவினும் திருவினும் உயர்ந்து பலவகைப்பட்ட பேரறங்களையும் புரிந்து முப்பத்திரண்டாவது ஆண்டில் தேவர் வடிவத்தை அடைந்தது. அவ்வாறு தேவவடிவத்தை யடைந்த பயன் தன்னைக் காத்துப்போற்றி அறஞ் செய்தவளது அருளின் பயனும் என்பதை நினைத்து முன்னைப் பிறவியிற் பொருந்திய கருங் குரங்கின் வடிவிலே ஒரு சிறு பகுதியான கையைக்கொண்டு சாயலன் மனைவி தனக்குச் செய்த அறப்பயனை அனைவருக்கும் அறிவிக்க இங்கே தோன்றினன்.”

சாரணர் கூறிய இவ்வுரையால் உலக நோன்பிகள் அறத்தின் பெருமையை அறிந்து வீடுபேறெய்தினர். “நீ அறத்தின் சிறப்பை யுணர்ந்து அதனை ஒப்புக்கொண்டாயாயின் இக் கண்ணகியைத் தாழ்க்காது அழைத்துச் சென்று உபசரிப்பாயாக” என்று

A

கூறியருளினார். மாதரியும் மகிழ்ந்து கௌந்தியடிகளைப் போற்றிக் கண்ணகியை அழைத்துச் சென்றாள்.

## 16. கோவலன் கொலை

பெறுதற்கரிய பாவையாகிய கண்ணகியை அடைக்கலமாகப் பெற்ற மாதரியானவள், அவனை இடையர்களது இருக்கை யல்லாததும் தனது மனைக்குப் பக்கத்திலே அமைந்ததும் செம்மண் பூசப்பட்டு அழகோடு விளங்குவதும் கட்டுவேலியாற் சூழப் பெற்றதுமான ஓர் இல்லின்கண் இருக்கச்செய்தாள். ஆய்ச்சியர் சிலரையும் உடன்சேர்த்துக்கொண்டு கண்ணகிக்கு நீராட்டுதல் செய்தாள். 'இம் மதுரைமாநகரத்துப் பெண்களெல்லாரும் அணியும் அணிகலன்களெல்லாம் நுமது பேரழகிற்குமுன் பெருமைகெடுவதாகும்; நுமக்குச் செய்யவேண்டிய குற்றேவல்களையெல்லாம் என்மகளாகிய ஐயை செய்வாள். யான் நும்மைப் பொன்னைப் போலப் போற்றுவேன். எம்முடனே ஈண்டே இருந்தருள்வீராக' என்று மாதரி தன்னுடைய அன்பையெல்லாம் கண்ணகிமீது சொரிந்தாள். 'கடுமையான வழியை நடந்தீர்கள். கவுந்தியடிகள் உங்கள் வழித்துயரைப் போக்கிக் குற்றமற்ற இடத்திலே சேர்த்தருளினார்கள். இனி உங்கள் கணவனுக்கு யாதொரு கவலையும் இல்லை' என்று கூறினாள்.

பின்னர் மாதரி 'இவர்கள் சிராவக நோன்புடையவர்களாதலின் இரவில் உண்ணார். ஆதலின், பகல்போது நீங்குவதற்குள்ளேயே சமைத்துண்ட

லுக்கு ஆவன செய்வீர்களாக' என்று ஆய்ச்சியரை ஏவினாள். உடனே ஆயர்குல மகளிர் புதுப்பானைகள், பலாக்காய், காயிலங்கள், வெள்ளரிக்காய் கொம்மட்டி மாதுளங்காய், மாங்கனி, வாழைக்கனி, செந்நெல்லரிசி, பால், நெய் முதலியவற்றைக் கண்ணகியிடம் கொடுத்தனர். உலையையும் உடன் துணையாக வைத்துக் கொண்டு கண்ணகி சமையலை முடித்துத் தன் கணவனை உண்பித்தாள். இக்காதலர்களது காட்சியைக் கண்டு ஆய்ச்சியர் மகிழ்ச்சி மிக்கெய்தினர்.

கோவலன் கண்ணகியின் அரும்பெரும் பண்பினை ஆதரம் பெருகப் போற்றினான். பின்னர்க் கண்ணகியின் காற்சிலம்புகளில் ஒன்றைப் பெற்றுக்கொண்டு மதுரை மறுகிற் சென்று விற்றுவர எண்ணினான். கண்ணகியிடம் எண்ணத்தைக் கூறினான். சிலம்பொன்றைப் பெற்றான். நடுநகரை நோக்கி நடந்தான். பல தீய சகுனங்கள் இடையே தடையாக எதிர்ந்தன. அத்தீய சகுனங்கள் எவற்றையும் பொருட்படுத்தாது தன் வழியே நடந்தான் கோவலன். கடைவீதியை அடைந்து தெருவழியே நடந்து சென்றுகொண்டிருந்தான்.

ஆண்டு, நூற்றுவர் பின்தொடரக் கூற்றுவன் போல் ஒரு கொடுந்தட்டான் அரசன் அளித்த வரிசைகளுடனே சென்றுகொண்டிருந்தான். கோவலன் அக்கொடியோனைக் கண்டான். பல காரணங்களால் அவன் தட்டான் என்று திட்டமாக அறிந்தான். அவன்பாற் சென்றான். அத்தீயோனை நோக்கினான். அவனுடைய வஞ்ச நெஞ்சத்தினை அறிந்திலன். "அரசன் மனைவி அணிதற்காஞ் சிலம்பினை நீ விலை

மதிக்க வல்லையோ?" என்றான். அப்பொல்லாத தட்டான் நல்லோனைப் போல நடித்தான். 'என்றால் முடியாது ஆயினும் கூடுமானவரை ஒருவாறு பார்க்கலாம்' என்றான். தாய்ப் பொன்னிலும் தவிட்டுப் பொன் தட்டும் தட்டானைக் கோவலன் நம்பினான். ஆடையிற் பொதிந்துவைத்திருந்த அருஞ்சிலம்பினை அவிழ்த்துக் காண்பித்தான். வஞ்ச நெஞ்சத் தட்டான் செஞ்சிலம்பினைக் கண்டான். "இச் சிலம்பு இந் நாட்டகத்தே அரசன் மனைவி கோப்பெருந்தேவிக்கல்லது, வேறொருவருக்கும் வாங்குவது அரிது. யான் சென்று இச்சிலம்பின் செய்தியை அரசனுக்கு அறிவித்து வருகிறேன். யான் மீண்டும் வருமளவும் ஈண்டே என் வீட்டிற்கருகாகிய இவ்விடத்தே இரு" வெனக் கூறி நிறுத்திவிட்டு அரண்மனையை நோக்கிச் சென்றான். செல்லும் தீமதியாளன் அரசனுடைய தேவியின் காற்சிலம்பொன்றை அண்மைக் காலத்தில் தான் களவாடியிருந்தான். அவன் அரசனுடைய தேவியின் காற்சிலம்பு தன்னிடம்தான் உள்ளதென்னும் செய்தி வெளிப்படுவதன் முன்னம் அத் திருட்டினை இவ்வேற்றூரான் மேல் ஏற்றிவிட்டுத் தான் தப்பித்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்து கொண்டான்.

"கரந்தியான் கொண்ட காலணி யீங்குப்
பரந்து வெளிப்படா முன்ன மன்னற்குப்
புலப்பெயர் புதுவனிற் போக்குவன் யானெனக்
கலங்காவுள்ளங் கரந்தனன் செல்வோன்."

அக்காலை அரசன் அவையிலே ஆடல் பாடல் நிகழ்ந்துகொண்டிருந்தன. அரசனும் அரசியும் ஒருங்கு வீற்றிருந்தனர். அரசன் கூடன்மாநகர் வாழ் நாடக

மகளிரின் ஆடல்பாடல்களிலே ஓடவிட்ட உள்ள முடையவனாக இருந்தான். அரசன் இருக்கும் நிலை கண்ட அரசி கோப்பெருந்தேவிக்கு ஊடல் கூடுவதா யிற்று. தலைக்குத் தலைவலி என்று தலைவற்குப் பொய் யுரை சாற்றிக் கன்றிய மனத்தினளாய் அந்தப்புரம் அடைந்தாள். அரசியின் உள்ளக்கருத்தை அறிந்து கொண்டான் அரசன். அவளது ஊடலைத் தீர்க்கத் தானும் அந்தப்புரத்திற்குப் புறப்பட்டுச் சென்றான். அக்காலை எதிர்ப்பட்டான் கருணையில்லாப் பொற் கொல்லன். அவன் அரசனை அணுகி "அரசே! கன்னக் கோலின்றிக் கவைக் கோலும் இன்றித், துயில் மந் திரமே துணையாகக் கொண்டு, வாயில் காவலாளரை யும் மயக்கி, அரண்மனைக் கண்ணே இருந்த அரசியின் செஞ்சிலம்பைத் திருடிய கள்வன் ஊர்க்காவலாளர் கண்ணிலே மறைந்து என் வீட்டின் பக்கத்தே வந்துள் ளான்" என்று ஒரு பெரும் பொய்யுரையை அரசனி டத்தே புகன்றான்.

அரசன் அக்காலைக் காம வேட்கை மிக்கவனாகச் சென்று கொண்டிருந்தான். அவனுள்ளம் ஒருவழி யில் இல்லை. சிறிது எண்ணவும் அவனுக்கு அறிவு சென்றிலது. ஊடலை ஒழிக்க உதவுமோர் உதவியாம் என்று எண்ணினான். காவலாளரைக் கூவி அழைத் தான். 'என் தேவியின் காற்சிலம்பு இவன் கூறும் கள் ளனிடத்தே உள்ளதாயின், அவனைக் கொன்று அச்சி லம்பினை ஈங்குக் கொணர்வீராக' என்று கூறினான். வினை வயத்தால் வேந்தனுள்ளமும் இவ்வாறு வேறு பட்டுவிட்டது. அரசன் கட்டளையைக் கேட்ட தட் டான் தோள்களைத் தட்டினான். உள்ளம் பூரித்தான். கழிபேருவகை கொண்டான். தான் எண்ணியது

இனிது முடிந்ததென்று மகிழ்ந்தான். அக்காவலாளருடன் கோவலன் இருந்தவிடம் சென்முன். கோவலனைப் பார்த்து, 'இவர்கள் நின்பால் உள்ள சிலம்பினைக் காண்டற்கு வந்துள்ளார்கள்;'காண்பிப்பாயாக' வென்முன். கோவலனும் சிலம்பினையெடுத்துக் காண்பித்தான். தட்டான் காவலாளரைத் தனியே அழைத்தான்; "இவனே கள்வன். இவன் கையிலிருப்பதே அரசியின் காற்சிலம்பு" என்று கூறினான்.

தட்டான் கூறியதைக் கேட்ட காவலாளர் நகைத்தனர். 'நல்ல இலக்கணத்தோடு இங்கு இருக்கின்ற இவன் எவராலும் கள்வன் என்று சொல்லப் படுவானும் கொல்லப்படுவானும் அல்லன். பத்தருள்ளம் பித்தேறியது போலும்' என்றனர். இவ்வாறு காவலாளர் கூறியதைக் கேட்ட தட்டான் நகைத்து, அக்காவலாளரைப் பார்த்துக் கூறுகின்முன்: பொல்லாத நடத்தையினாலே களவு செய்துண்ணும் மக்கள் மந்திரம் முதலிய எட்டையும் படையாகக் கொண்டு திரிவார்கள். இவன் வலியை அழித்துத்தொலைப்பதல்லாமல் இவன் மருந்திற் குட்பட்டீர்களாயின் அரசனால் வருந் தண்டனையை அனுபவிப்பீர்கள். திருடர்கள் தாங்கள் கற்ற மந்திரத்தை நாவிடத்தே கூறுவார்களாயின், கண்ணுக்குத் தெரியாத தேவர்களைப் போலக் காணப்படமாட்டார்கள். தாங்கள் வழிபடுந் தெய்வம் எப்பொழுதுந் தங்களுக்கு முன் நிற்கும்படி தியானிப்பார்களாயின், தம் கையில் அகப்பட்ட பொருளை நமக்குக் காட்டியும் மறைந்துவிடுவார்கள். மருந்தால் நம்மை மயக்குவார்களாயின் நாம் இருந்த விடத்தை விட்டுப் பெயரவும் முடியுமோ? நல்ல குறி ஏற்பட்டால் அன்றிப் பெறுதற்கரிய பொருள் வருவ

தாயினும் திருடச் செல்லமாட்டார்கள். களவுநூலிற் சொல்லப் பெறுகிற தொழில்களை அறிந்து செய்வார்களாயின், தாம் மண்ணகத் திருப்பினும் விண்ணகத் திருப்பினும் இந்திரனது மார்பிலுள்ள முத்துமாலையையுங் கைப்பற்றுவார்கள்.

"முன்னாளிலே ஒரு திருடன் தூதன் உருவங்கொண்டு அரசனது வாயிலின்கண்ணே பகற்பொழுது இருந்துவிட்டு இராப்பொழுதிலே பெண்ணுருக் கொண்டு அஞ்சாது அரசனது பள்ளியறையிற் புகுந்து பதுங்கியிருந்தான். நம்முடைய நெடுஞ்செழிய மன்னனுக்கு இளங்கோவாகிய அரசன் துயில்கின்ற பொழுது, அவனது மார்பின்கண்ணே கிடந்து ஒளி விடுகின்ற வைர மாலையை விரைவிற் கழற்றினான். அரசன் துயில் உணர்ந்து மார்பிலே மாலையைக் காணாத் திருடனைக் கண்டான். உடைவாளை உறையினின்றும் உருவினான். அவ்வுறையைத் திருடன் பறித்துக்கொண்டு அரசன் குத்துந்தோறும் வாளிலே உறையைச் செறித்தான். அவ்வாறு செய்யவே அரசன் ஆற்றாய் மற்போர் செய்யத் தொடங்கினான். அக்காலைத் திருடன் ஆங்குள்ள ஒரு தூணைத் தானாகக் காட்டி, அத்தூணைக் குத்துமாறு செய்துவிட்டுத் தான் தனது களவு நூற் கல்வியால் தப்பிச் சென்றுவிட்டான். அவ்வாறு சென்றோனை இன்றுவரைக் கண்டார் இல்லை. ஆதலின் இக்கள்வர்களுக்கு இவர்களே ஒப்பாதலன்றி வேறொருவரை ஒப்புக் கூறவும் முடியுமோ?" என்று தான் கற்ற களவுநூற் பயிற்சியை யெல்லாம் காவலருக்குக் கூறினான்.

இவ்வாறு பொற்கொல்லன் கூறியதும், அக்காவலாளருள்ளே யிருந்த ஒரு கீழ்மகன், "இப் பத்தர் கூறியது ஒக்கும். முன்னாளிலே இராக்காலத்தே ஒரு கள்வன் என் முன்னர் வந்து தோன்றினான். யான் எனது கை வாளை உறையில் நின்றும் கழித்தேன். அவ்வாளை அக்கள்வன் பிடுங்கினான். அக் கள்வனையும் என் வாளையும் இதுவரை எவ்விடத்தும் கண்டிலேன். ஆதலின், கள்வர் செய்கை யாருக்கும் அறிதல் அரிது. இவனை நாம் தப்பவிடின் அரசன் நம்மை வருத்துவான். ஆதலான் இனி இதற்குச் செய்யவேண்டியவற்றைக் கூறுங்க" ளென்றான்.

இவ்வாறு இவன் கூறிய அளவில் அறிவின்மையாலே கொலை யஞ்சாத கீழ்மகன் ஒருவன் தன் கையிலே இருந்த கொடிய வாளால் வணிக வள்ளலாம் கோவலனை வெட்டினான். அவ்வெட்டுக் குறுக்கே தணித்தது. அவ்வெட்டில் நின்றும் இரத்த வெள்ளம் பெருகிப் பூமடந்தை மீது பொழிந்தது. அரசனுடைய செங்கோலும் சாய, அருங்குமரனாங் கோவலன் நிலத்தின்மீது சாய்ந்தான். அவன் உயிர் உடலை விட்டு அகன்றது. அறக்கடவுள் அலறினார்.

"நண்ணும் இருவினையும் நண்ணுமின்கள் நல்லறமே
கண்ணகிதன் கேள்வன் காரணத்தால்—மண்ணில்
வளையாத செங்கோல் வளைந்ததே பண்டை
விளைவாகி வந்த வினை.

---

# 17. ஆய்ச்சியர் குரவைக்கூத்து

பாண்டியனுடைய அரண்மனையில் காலை முரசம் முழங்கியது. அன்று மாதரியானவள் அரண்மனைக்கு நெய்யளக்க வேண்டிய நாள். தன் மகள் ஐயையை அழைத்துத் 'தயிரைக் கடைய வேண்டும்' என்றாள். கடை கயிறும் மத்தும் கொண்டுசென்று தாழியைத் திறந்து பார்த்தனர். பிறை யிட்ட பால் உறைய வில்லை. தொழுவத்திற் கட்டியிருந்த காளைகள் கண்ணீர் சொரிந்தன. முதல் நாள் எடுத்த வெண்ணெயை உருக்க வைத்தபோது அது உருகவில்லை. ஆட்டுக் குட்டிகளும் துள்ளி விளையாடாமல் சோர்ந்து கிடந்தன. பசுக்கூட்டங்களும் நடுங்கி நின்று கதறின. அப்பசுக்களின் கழுத்திற் கட்டிய மணிகளும் அறுந்து நிலத்தில் வீழ்ந்தன. இத் தீக்குறிகளைக் கண்ட மாதரி ஏதோ தீது வரப்போகின்றது என்று அஞ்சினாள். பின்னர் ஒருவாறு தெளிந்தாள். கண்ணன் நம்மைக் காப்பாற்றுவான். அவன் பலராமனுடன் முன்னை ஆயர்பாடியில் ஆடிய கூத்துக்கள் பலவாம். அவற்றுள் கண்ணன் பின்னைப் பிராட்டியுடன் ஆடிய குரவைக் கூத்தை இன்று ஆடுவோம்; அதனால் வரப்போகும் துயர் வாராது நீங்கும் என்றாள். ஆய்ச்சியர் குரவைக் கூத்தாடினர்.

1. கன்று குணிலாக் கனியுதிர்த்த மாயவன்
   இன்றுநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
   கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழி :
2. பாம்பு கயிறாக் கடல்கடைந்த மாயவன்
   ஈங்குநம் ஆனுள் வருமேல் அவன்வாயில்
   ஆம்பலந் தீங்குழல் கேளாமோ தோழி :

3. கொல்லையஞ் சாரற் குருந்தொசித்த மாயவன்
எல்லைநம் ஆனுள் வருமேல் அவன் வாயில்
முல்லையந் தீங்குழல் கேளாமோ தோழி ;

1. கோவா மலையாரம் கோத்த கடலாரம்
தேவர்கோன் பூணாரம் தென்னர்கோன் மார்பினவே
தேவர்கோன் பூணாரம் பூண்டான் செழுந்துவரைக்
கோகுல மேய்த்துக் குருந்தொசித்தான் என்பரால் ;

1. வடவரையை மத்தாக்கி வாசுகியை நாணாக்கிக்
கடல்வண்ணன் பண்டொருநாள் .கடல்வயிறு கலக்கினையே
கலக்கியகை அசோதையார் கடைகயிற்றாற் கட்டுண்கை
மலர்க்கமல உந்தியாய் மாயமோ மருட்கைத்தே.

1. மூவுலகும் ஈரடியால் முறைநிரம்பா வகைமுடியத்
தாவியசே வடிசேப்பத் தம்பியொடுங் கான்போந்து
சோவரணும் போர்மடியத் தொல்இலங்கை கட்டழித்த
சேவகன்சீர் கேளாத செவியென்ன செவியே
திருமால்சீர் கேளாத செவியென்ன செவியே ;

2. பெரியவனை மாயவனைப் பேருலக மெல்லாம்
விரிகமல வுந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் திருவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தங் கண்ணென்ன கண்ணே.

3 மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றப்
படர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை யேத்தாத நாவென்ன நாவே
நாராய ணாவென்னா நாவென்ன நாவே.

# 18. கண்ணகி துன்பம்

கூத்து முடிந்ததும் மாதரி திருமாலைப் பூசித்தற்கு நீராடச் சென்றாள். அப்பொழுது மதுரையின் நடு நகரில் இருந்து கோவலன் கொலையுண்ட செய்தியை அறிந்து,வந்த ஆய்ச்சி ஒருத்தி அச்செய்தியைக் கண்ணகிக்குச் சொல்லத் துணியாதவளாய் ஆயர் மகளிரிடம் கூறி, அவர்களோடு தானும் சேர்ந்து வருந்தினாள். அச் செய்தியை அறியாத கண்ணகி அவர்களைப் பார்த்து, 'நான் என்னுடைய காதலனைக் காணேன். அதனால் என்நெஞ்சம் மிகுந்த துன்பத்தினை யடைகின்றது. மூச்சும் கொல்லனூதும் துருத்தியும் தோல்வியடையப் பெரிதாகக் கிளம்புகின்றது. என் கணவன் சென்றது முதலே அவரை எப்போது காண்போம், எப்போது காண்போம் என்று என்னுள்ளம் சுழலுகின்றது. குறிப்பாக நீயும் இம்மாதரும் என்னைநோக்கிப் பேசிக்கொள்வது எனக்கு மேலும் ஐயத்தை அளிக்கின்றது. நீ மதுரையில் தெரிந்துவந்த செய்தி எதுவோ அதனை எனக்குத் தெரிவிப்பாயாக' என்றாள்.

இனி மறைத்தலாற் பயனில்லை யென்பதையுணர்ந்த அம்மாது 'நின் கணவன் அரண்மனைச் சிலம்பைத் திருடிய கள்வனென்று காவலாளரால் வெட்டுண்டிறந்தார்' என்றாள். இச்சொல்லை அவள் சொல்லி முடிக்குமுன் கண்ணகி துடிதுடித்து நிலத்தில் வீழ்ந்தாள்; சீறி எழுந்தாள்; அழுதாள்.

1. இன்புறு தங்கணவர் இடரெரி யகமூழ்கத்
துன்புறு வனநோற்றுத் துயருறு மகளிரைப் போல்
மன்பதை அலர்தூற்ற மன்னவன் தவறிழைப்ப
அன்பனை இழந்தேன்யான் அவலங்கொண் டழிவலோ

2. நறைமலி வியன்மார்பின் நண்பனை இழந்தேங்கித்
துறைபல திறமூழ்கித் துயருறும் மகளிரைப்போல்
மறனொடு திரியுங்கோல் மன்னவன் தவறிழைப்ப
அறனெனு மடவோய் யான் அவலங்கொண் டழிவலோ
3. தம்முறு பெருங்கணவன் தழலெரி யகமூழ்கக்
கைம்மைகூர் துயர்மூழ்கும் கவலைய மகளிரைப்போல்
செம்மையின் இகந்தகோல் தென்னவன் தவறிழைப்ப
இம்மையும் இசையொரீஇ இனைந்தேங்கி யழிவலோ

என்று பல கூறிப் புலம்பினாள்; ஏங்கினாள். அருகில் நின்ற ஆய்ச்சியரை யெல்லாம் நோக்கினாள். "அந்தோ! பெண்காள்! நீங்களெல்லோரும் கேளுங்கள்" என்று கூறிவிட்டுக் காய்கதிர்ச் செல்வனைப் பார்த்து, 'என் கணவன் கள்வனோ?' என்று கேட்டாள். உடனே அங்கிருந்தோ ரனைவருக்கும் கேட்கும்படி 'ஏ நங்காய்! உன் கணவன் கள்வ னல்லன். அவனை இவ்வாறு கொலைபுரிந்த இப்பாண்டியன் ஊரை விரைவில் எரி யுண்ணும்' என்றொரு குரல் எழுந்தது.

---

## 19. கண்ணகி கோவல னுடலைக் காண்டல்

ஞாயிற்றுச் செல்வன் "நின் கணவன் கள்வன் அல்லன்" என்றதைக் கேட்ட கண்ணகியானவள் தன்னிடமிருந்த மற்றொரு சிலம்பினைக் கையி லெடுத்துக் கொண்டு புறப்பட்டாள். மதுரைமா நகரின் மங்கையர் எதிர்ப்பட்டனர். அவர்களைப் பார்த்து "முறையில்லாத அரசன் இறைபுரியும் குறையினை யுடைய ஊரிலிருந்து வாழும் நிறையையுடைய பெண்காள்! யான் இம்மதுரைமா நகரின்கண்ணே

மற்றெவரும் அடையாத துன்பத்தினை யடைந்தேன். என்னுடைய கணவன் கள்வன் அல்லன். எனது காற் சிலம்பின் விலையைக் கொடாது சிலம்பைக், கைப்பற் றுதற்கே அவனைக் கள்வனென்று கூறிக் கொன்றான் இவ்வூர் அரசன். பெண்காள்! யான் எனது அன்பு நிறைந்த காதற் கணவனை உயிருடன் காண்பேன். கண்டு அவனுடைய வாயினால் இனிய மொழிகளைக் கேட்பேன் அவ்வாறு கண்டு கேளேனாயின் நீங்கள் என்னை இகழ்வீர்களாக,' என்று கூறி, அல்லலுற்று ஆற்றாது அழுது துயருறுவாளைக் கண்டு மதுரையார் தாமும் வருந்தி நீக்கமுடியாத துன்பத்தை யடைந்து துயருற்றனர். இவளடைந்துள்ள துன்பத்தால் நமக் கும் யாதேனும் துன்பம் நேரிடும். பாண்டியனது செங்கோல் இவ்வாறு கொடுங்கோலானது யாதி னாலோ என்று பல கூறினர். சிலர் வெட்டுண்டு கிடந்த கோவலனைக் கண்ணகிக்குக் காட்டினர். அவ்வுடலைக் கண்ட கண்ணகியானவள் ஓவென்றழுது புலம்பினாள்.'என்னுடைய மிகுந்த துன் பத்தினைப் பார்த்தும் நீர் ஆறுதல் கூறுகின்றீரில்லை. மணம் பொருந்திய சந்தனம் முதலிய வாசனைப் பொடிகளணியப்பெற்ற நும்முடல் இப்பொழுது மண்ணின்மேல் வீழ்ந்து கிடப்பதோ? எனக்குத் துணையாக ஒருவரும் இன்றித் தியக்கத்தைச் செய்யும் இம்மாலைக் காலத்தே யான் வருந்தி நிற்ப, என் கண் முன்னரே நுமது அழகிய மார்பும் நிலத்தே வீழ்ந்து கிடப்பதோ? நீர் இவ்வாறு என்னைத் தேற்றாது கிடப்பின் நான் அடையுந் துன்பம் எனது பழைவினைப் பயன் என்று யாருங் கூறார்களோ? இம்மதுரையிலே பெண்கள் இருக்கின்றார்களோ? பெரியோர்கள் இருக்

இன்றார்களோ? தெய்வமும் இருக்கின்றதோ?' என்று மற்றும் பல கூறித் தன் கணவன் உடலைத் தழுவிக் கொண்டாள். அப்போது கோவலன் உயிர் பெற்று எழுந்து நின்றான். கண்ணகியை நோக்கி "நினது நிறை மதி போலும் முகம் ஒளி குன்றியதே" என்று கூறி அவள் கண்ணீரைத் தன் கையால் மாற்றினான். 'பெண்ணே! நீ இங் கிருப்பாயாக' என்று கூறிவிட்டுத் தான் தேவயாக்கை கொண்டு வானுலகு புக்கான். கோவலன் அவ்வாறு தோன்றித் தன்னைத் தேற்றிச் சென்றது என்ன மாயமோ என்று எண்ணினாள். அவளுடைய சினம் தணியவில்லை. நான் என் சினந் தணிந் தன்றிக் கணவனைக் கூடேன். பாண்டியனைக் கண்டு இவ்வாறு கொலை செய்ததற்குக் காரணம் கேட்கி றேன்'என்று புறப்பட்டு அரண்மனை வாயிலை யடைந் தாள்.

## 20. வழக் குரைத்தல்

அத்தருணத்தில் அரசி கோப்பெருந்தேவி தான் கண்ட தீக் கனவினை அரசனிடம் சென்று சொல்லிக் கொண்டிருந்தாள். வாயிலை யடைந்த கண்ணகி, வாயிலில் உள்ள காவலனைப் பார்த்து 'ஓ வாயில் காவலனே! ஓ வாயில் காவலனே!! அறிவு கெட்டுப்போன அரசனுடைய அரண்மனை வாயிலைக் காக்கும் காவலாளனே!!! நீ அரசனிடம் சென்று, இரண்டு சிலம்பினுள் ஒரு சிலம்பைக் கையிலேந்திய பெண்ணொருத்தி வாயிலிடத்தே வந்திருக்கின்றாள் என்று' அறிவிப்பாயாக' என்று கூறினாள்.

உடனே அந்தக் காவலன் விரைந்து அரசனிடஞ் சென்று அரசனை வாழ்த்தி 'அரசே, நம்முடைய அரண்மனை வாயிலிலே பெண் ஒருத்தி வந்திருக்கின்றாள். அவள் மயிடாசுர சங்காரியாகிய கொற்றவை யல்லள்; பிடாரி யல்லள்; இறைவனோடு ஆடல் கண்ட பத்திரகாளியும் அல்லள்; தாருகாசுரனது வலியைத் தொலைத்தாளும் அல்லள்; மிகச் சினங் கொண்டவள் போலக் காணப்பெறுகின்றாள். அவள் கணவனை இழந்தவளாம். தங்களைக் காண்டற்கு வந்திருக்கின்றாள்' என்று கூறினான்.

காவலாளன் கூறியதைக் கேட்ட பாண்டியன் 'அப்பாவையை உடனே கொண்டுவரவிடுக' என்றனன். உடனே வாயிற் காவலாளன் வெளிப்போந்து மன்னன் இருப்பையும் 'வரவிடுக' என்றதையும் கண்ணகிக்குக் கூற, அரசன் இருந்த இடத்தை நீர் பொழியுங் கண்களுடன் கண்ணகி நண்ணினாள். மன்னன் கண்ணகியை நோக்கி, 'நீர்பொழியும் கண்களை யுடையவளாய் எம்முன் வந்தோயாகிய நீ யார்?' என்றான். அவ்வுரை கேட்ட கண்ணகியானவள், 'தெளிந்த காரியங்களைச் செய்தலில்லாத அரசனே, கூறுவேன் கேட்பாயாக. ஒரு புறாவின் உயிரைக் காத்தற் பொருட்டுத் தன் உடம்பின் சதையை அறுத்துக் கொடுத்த சிபிச்சக்கரவர்த்தியினுடைய நாட்டிலே இருப்பவள் நான். மேலும் எனது நாடு எப்பேர்ப் பட்டதெனின், ஒரு பசுவினது கன்றிற்காகத் தன்னுடைய ஆருயிர்ப் புதல்வனை ஆழியால் மடித்த சோழனுடையது. அந்நாட்டிலுள்ள காவிரிப்பூம் பட்டினமே என்னுடைய ஊராகும். மாசாத்துவான் என்னும் வணிகனுடைய மருகி. நினது கொடுங்கோலாற்

கொலையுண்ட கோவலனுடைய மனைவி" என்றாள். இவற்றைக் கேட்ட பாண்டியன், 'பெண் அணங்கே! கள்வனைக் கொல்லல் கொடுங்கோல் அன்று, செங்கோலே ஆகும்' என்றான்.

கண்ணகியானவள் சினந்து கூறுகின்றாள். "நல்லறிவில்லாத கொற்கை வேந்தனே! நன்கு தெரியாமல் தண்டிப்பது நல்ல நெறிதானோ? நீ செய்தது தவறாயின் என் ஆருயிர்க் காதலனை மீட்டளிப்பாயோ? என் சிலம்பின் உள் அரி மாணிக்கம். உன் மனைவியின் சிலம்பில் உள்ள அரி யாது? ஆராய்ந்து பார், உன் அறநெறி நன்கு விளங்கும்."

கண்ணகியின் வழக்குரையைக் கேட்ட காவலன் 'நின் கூற்றுத் தக்கதே; என் மனைவி சிலம்பின் உள் அரி முத்து' என்று கூறிக் கோவலனிடமிருந்து தான் கொண்டுவரச் செய்த சிலம்பைக் கண்ணகி முன்னர் வைத்தான். கண்ணகி நங்கை அச்சிலம்பைத் தன் கையால் உடைத்தாள். அதனுள்ளிருந்து மாணிக்க அரியானது மன்னன் திடுக்கிட அவன் முன்னர் வீழ்ந்தது. அதனைக் கண்ட மன்னன் திடுக்கிட்டான். "ஆ! நெடுஞ்செழியன் கொடுஞ் செழியன் ஆனேனே! கெட்டேனே. பொற்கொல்லன் பொய்யுரையைக் கேட்டுப் பொல்லாத காரியம் புரிந்தேனே; கெடுக என் ஆயுள்" என்று கூறிப் படிமிசை வீழ்ந்தான். அவனுடைய தவற்றின் போக்கை அவனால் தாங்கமுடியவில்லை. உடனே உயிர் உடலை விட்டு அகன்றது. நிகழ்ந்ததை அறியாத கோப்பெருந்தேவி 'அரசன் மூர்ச்சித்து விழுந்திருக்கின்றான் போலும்' என்று எண்ணினாள். நடுநடுங்கினாள். கண்ணகியின் இணையடிகளிலே விழுந்து வணங்கினாள். தாய் தந்தை முதலாயினோரை

இழந்தவர்க்கு அம்முறை சொல்லிப் பிறரைக் காட்டுதல் கூடும். கணவனை இழந்த மகளிர்க்கு அவ்வாறு முறைகூறிக் காட்டுதல் இயலாது" என்றுகூறிக் கண்ணகியின் முன்னர் நிலத்தில் வீழ்ந்தாள்.

வெண்பா

அல்லவை செய்தார்க்(கு) அறங்கூற்றம் ஆமென்னும்
பல்லவையோர் சொல்லும் பழுதன்றே பொல்லா
வடுவினையே செய்த வயவேந்தன் தேவி
கடுவினையேன் செய்வதூஉங் காண்.

காவி யுகுநீரும் கையில் தனிச் சிலம்பும்
ஆவி குடிபோன அவ்வடிவும்—பாவியேன்
காடெல்லாம் சூழ்ந்த கருங்குழலும் கண்டஞ்சிக்
கூடலான் கூடாயி னான்.

மெய்யிற் பொடியும் விரித்த கருங்குழலும்
கையில் தனிச்சிலம்பும் கண்ணீரும்—வையைக்கோன்
கண்டளவே தோற்றான்அக் காரிகைதன் சொற்செவியில்
உண்டளவே தோற்றான் உயிர்.

---

## 21. வஞ்சினங் கூறுதல்

தன்னை வணங்கிய கோப்பெருந் தேவியைப் பார்த்துக் கண்ணகியானவள், "ஓ கோப்பெருந் தேவி! கொடுவினையாட்டியாகிய யான் ஒன்றும் அறியேன். ஆயினும், கூறுவேன் கேட்பாயாக. வினைகளெல்லாம் செய்தாரை விட்டு நீங்கற்கரிய தன்மையை உடையன. முற்பகல் பிறனுக்குக் கேடு செய்தான் ஒருவன், அக் கேட்டினை அன்றைப் பிற்பகலே அடைவான்.

"நல்ல பகற்காலத்திலே வன்னி மரமும, மடைப் பள்ளியும் தனக்கு ஆதாரம் உரைக்கும் பொருளாகப் பலரும் அறிய அவற்றைக் காட்டிய காரிகை நல்லாளும்;

"காவிரிக் கரைக்கண் செய்த மணற்பாவை தனக்குக் கணவனென்று பிறர் கூறக் கேட்டு அதனைக் காத்து நின்ற கற்புடையாளும்;

"தான் காதலித்த ஆட்டனத்தி என்பானைக் காவிரி வெள்ளம் அடித்துச் செல்லத் தான் நீரின் பின் சென்று கடற்கரையில் நின்று அவனை நினைத்துக் கூவியரற்றக் கடல் அவனைத் திரும்பக் கொணர்ந்து கொடுக்கப் பெற்று மகிழ்ந்த ஆதிமந்தியென்பாளும்;

"மரக்கலத்திற் சென்ற தன் கணவன் மீண்டும் வரும் வரையிலும் கடற்கரைச் சோலையினிடத்திலே கல்லுருவாக நின்று கணவன் வந்த பிறகு முன்னையுருக் கொண்ட மொய்குழலாளும்;

"மாற்றாளுடைய குழந்தை கிணற்றின் கண்ணே விழுந்துவிட, அது குறித்து உலகோர் தன்மீது ஐயமுறுவண்ணம் தன்னுடைய குழந்தையையும் கிணற்றின்கண்ணே தள்ளிப் பின்பு இரண்டு குழந்தைகளையும் கிணற்றிலிருந்து எடுத்துக்கொண்ட பெண்ணின் நல்லாளும்;

"அயலான் ஒருவன் தன்னைப் பார்த்த தீய பார்வைக்கு வருந்தி வேற்றூர் சென்ற தன்னுடைய கணவன் மீளும் வரையிலும் தன் முகத்தைக் குரங்கு முகமாக்கிக்கொண்டிருந்து கணவன் வந்த பிற்பாடு

குரங்கு முகத்தை நீக்கி முன் முகத்தைக் கொண்ட பெருங் கற்பினளும்;

"தன் தோழியுடன் விளையாட்டுப் பருவத்தில், 'எனக்கு மகளும் உனக்கு மகனும் பிறந்தால் இருவருக்கும் மணம் செய்வோம்' என்று பேசிக்கொண்ட செய்தியைத், தாய் தன் கணவனுடன் சொல்லக் கேட்ட மகள், தானே சென்று மணமகன் முடவன் என்பதனையும் கருதாது மணந்து தன் தாயை மகிழ்வித்த அருங்கற்பினளும், மற்றும் பல கற்பரசிகள் பிறந்த ஊரிலே யானும் பிறந்தேன். யானும் அவர்களைப் போல ஒரு கற்புடைய மகள் என்பது உண்மையாயின் உன்னோடு இந்த மதுரையையும் ஒழிப்பேன். நான் கூறும் வஞ்சின உரையையும் காண்பாயாக" என்று அரண்மனையைவிட்டு நீங்கினாள்.

அவ்வாறு நீங்கிய கண்ணகி மதுரை நகரிலுள்ளோரைப் பார்த்து, "யான் விரும்பிய என் காதலனைக் கொன்ற அரசனது நகரத்தின்மீது சீற்றத்தை யுடையேன். இச் சீற்றத்தால் சிறிதும் குற்றம் உடையேன் அல்லன்" என்று இவ்வாறு கூறித் தனது இடக் கொங்கையை வலக் கையால் திருகிச் சூளுற்று மறுகின் கண்ணே வீசியெறிந்தாள். அப்போது தீக்கடவுளானவன் ஒரு பார்ப்பன வடிவத்தோடு கண்ணகி முன்னர்த் தோன்றி, "சிறந்த கற்பினையுடையாய்! இந்நகர் நினக்குத் தவறு செய்த அன்றே எரித்தழித்தற்கு முன்னரே யான் ஏவப்பெற்றுள்ளேன். இந்நகரத்தின் கண்ணே யார் யார் பிழைத்தற்குரியார்?" என்று கேட்டான். அதற்குக் கண்ணகியானவள், 'பார்ப்பார், அறவோர், பசு, பத்தினிப் பெண்டிர், மூத்தோர், குழவி என்று சொல்லப்படும்

இவர்கட்குத் தொல்லை செய்யாது தீத்திறத்தோர் பக்கமே சென்று அவர்களை அழிப்பாயாக' என்று கட்டளை யிட்டாள். இவ்வாறு கண்ணகியானவள் ஏவிய மாத்திரத்தில் மதுரைமா நகரில் பெருந் தீ மூண்டது.

## 22. மதுரை அழற்படுதல்

கண்ணகியின் ஏவல் பெற்ற தீக்கடவுளின் கூறு வெளிப்பட்டது. நகரைக் காக்குந் தெய்வங்கள் காவா தொழிந்தன. நெடுஞ்செழிய மன்னனுடைய ஆசான், நிமித்திகன், அறங் கூறுவோர், காவிதிப் பட்டம் பெற்றோர், ஓலை எழுதுவோர் மற்றும் அரண் மனையிலே உள்ளோர்கள் நெடுஞ்செழிய மன்னன் தன் தேவியுடன் வளைந்த செங்கோலை உயிர் கொடுத்து நிமிர்த்தியதனை உணராமலே ஓவியக் கூட்டங்கள் போல உரை யடங்கி யிருந் தார்கள்.

குத்துக்கோலினராகிய யானைப் பாகரும், குதிரைப்பாகரும், தேர்ப்பாகரும், போர் வீரரும், அரண் மனை வாயிலிலே தீ மூள்வதைக் கண்டு நெருங்கினர். கடை வீதியும், தேர் வீதியும், அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்னும் நால்வகை மரபினர் தெருக்களும் தியாற் கலங்கலாயின. அறத்தன்மை யுடையோரைத் தீ அணுகவில்லை. பசுக்களும், கன்று களும் ஓடி ஆயர் தெருக்களை அடைந்தன. யானை, குதிரை முதலாயின விரைந்தோடி நகரைக் கடந் தன. சேக்கையிலிருந்த ஆடவரும் மகளிரும் தியங்

கிச் செய்வதறியாது வெளிப்பட்டார்கள். குழந்தை களோடு உறங்கினோர் அவர்களை எழுப்பிக்கொண்டு வருந்தியோடினர்.

இல்லத்திலிருந்து விருந்தினரைப் பேணி இல்லற நெறியில் வழுவாத மகளிர் மிகவும் மகிழ்ச்சியுற்று, விளங்கும் பூண் அணிந்த மார்பினையுடைய தன் கொழுநனை இழந்து சிலம்பாலே பாண்டிய மன்னனை வெற்றிகொண்ட மங்கை தன் கொங்கையால் விளைத்த பூசல் கொடியதன்று என்று தீக்கடவுளை வணங்கித் துதித்தனர்.

அறுபத்து நான்கு கலை பயின்ற கணிகையர் வாழும் தெருவில் ஒலித்த மத்தளம், முழவம், குழல், யாழ் முதலிய ஒலிக் கருவிகள் எல்லாம் ஒலியடங் கின. நாடக மடந்தையர் ஆடரங் கொழிந்து; 'இந் நாட்டிற் புதிதாக வந்து இவ்வூரைத் தீ மூட்டிய வீர பத்தினி எந்நாட்டினளோ — யார் மகளோ' என்று வியந்து புகழ்ந்தனர். மதுரையில் வழக்கமாக நடைபெறும் மாலைத் திருவிழாக்கள் நின்றன. மறை யோசை அடங்கியது. தீ வேட்டல், தேவ வழிபாடு முதலிய நல்வினைகள் ஒழிந்தன. மனைகள் விளக் கேற்றப் பெறவில்லை. மற்றும் பலவகையாலும் மதுரைமா நகர் பாழ்பட்டது. துயரால் உள்ளங் கொதித்திருந்த கண்ணகி உலை மூக்குப்போல் பெரு மூச்சு விட்டுப் பெரிய தெருக்களிற் சுற்றித் திரிந்து மயங்கித் தவித்தாள். அப்பொழுது மதுராபதி என் னும் தெய்வம் கண்ணகியிடத்திற்கு வந்தாள்.

## 23. மதுராபதி பழம்பிறப் புரைத்தல்

சடையை யுடைய தலையிலே இளம் பிறையை முடித்தவள். குவளை மலர் போன்ற கண்களிடத்தே மையைப் பூசியவள். விளக்கமாகிய ஒளி பொருந்திய முகத்தினை யுடையாள். கடைவாய்ப் பல் வெளிப் பட்டுத் தோன்றுகின்ற பவளம் போலும் சிவந்த வாயினை யுடையாள். இட மருங்கு இருண்ட நீல மாயினும், வல மருங்கு பொன் போன்று ஒளிரப் பெறுபவள். இடக் கையில் பொற்றாமரையை யேந்தி யிருப்பினும், வலக் கையிலே அழகிய ஒளி விடுகின்ற மழுப் படையினை யுடையவள். வலக் காலில் வீரக் கழலைக் கட்டி யிருப்பினும், இடக் காலில் சிலம்பை யணிந்தவள். கொற்கை நகரத் தலைவனும், குமரி யாற்றுத் துறைவனும், இமயமலையைத் தன் ஆட்சி யின் வட வெல்லையாக வுடையவனும், பொதிய மலையை உடையவனும் ஆகிய பாண்டியனுடைய குல முதலை அடி தொடங்கியே காக்கும் உரிமை யுடையவள். இத்தகைய கோலத்தையுடைய மதுரா பதியானவள் கண்ணகிக்கு முன்னிலையாகத் தோன் றாமல் பின்னிலையாகத் தோன்றிக் கண்ணகியைப் பார்த்து, 'நங்காய்! நான் கூறுவதைக் கேட்பாயாக' என்றாள்.

கண்ணகியானவள் வலப்பக்கமாகத் திரும்பி அம் மதுராபதித் தெய்வத்தைப் பார்த்து, 'என்பின்னர் வருகின்ற நீ யார்? என்னுடைய துன்பத்தின் கார ணத்தை நீ அறிவாயோ?' என்று கேட்டாள். அதற்கு அம்மதுராபதித் தெய்வமானது, "நான் இம் மதுராபதியிலுள்ள ஒரு தெய்வமாவேன். என்

னுடைய பெயர் மதுராபதி என்பது. நினக்கு நேர்ந் துள்ள தொல்லைகளுக்கெல்லாம் மூலகாரணத்தை நான் அறிவேன்; அதனைக் கேட்பாயாக.''

இந் நகரத்து பாண்டிய மன்னன் மறையொலி யினைக் கேட்பதல்லது மணி நா ஒலியைக் கேட்டறி யான். பகையரசர்கள்தாம் இவனைப் பழித்துக் கூறு வார்களே யல்லாமல், குடிகளால் தூற்றப்பெறும் கொடுங்கோலன் அல்லன். மகளிருடைய அழகிய பார்வையினாலே, தன்னிடத்தேயுள்ள மதம் வெளிப் பட்டு வரம்பு கடந்து செல்லும் உள்ளத்தினையுடைய இளமையாகிய யானை, கல்வியாகிய பாகனுக்கு அகப் படாது தளராத ஊக்கத்தோடு ஓடினாலும், நல் லொழுக்கத்தோடு பொருந்திய இச் சிறந்த குடியின் கண் பிறந்தோர்க்குக் குற்றத்தினைச் செய்யாது.

### கீரந்தை கதை

கீரந்தை என்னும் ஓர் ஏழைப் பார்ப்பான் ஒரு நாள் காசிக்குக் கங்கையாடப் புறப்பட்டான். அவன் மனைவி தனக்குத் துணையில்லையே என்று கலங்கினாள். அதற்குப் பார்ப்பான் 'அஞ்சாதே, அரசனுடையசெங் கோல் நின்னைக் காக்கும். அதனினும் சிறந்த காப் பில்லை' என்று இல்லாளைத் தேற்றிச் சென்றான். நகர் சுற்றிவந்த மன்னன் இம்மொழியைக் கேட்டான், அவ்வீட்டைப் பாதுகாத்துவந்தான். திங்கள் சில சென்றன. ஒருதினம் அவ்வீட்டினுள் பேச்சொலி கேட்டது. ஐயங்கொண்ட அரசன் ஆராயக் கதவைத் தட்டினான். யாரோ கள்வன் என்று பார்ப் பான் ஐயுற்றான். அன்று அரசனுடைய செங்கோல் காக்கும் என்று கூறிச் சென்றீர் இன்று அது

நம்மைக் காவாதோ என்றாள் பார்ப்பனி. மறுநாள் அரசன் தன்னுடைய கையைத் துணித்துக்கொண்டான். அத்தகைய செங்கோன் முறைமையை உடையவர்கள் பாண்டியர்கள்.

### வார்த்திகன் கதை

மற்றும் கூறுகிறேன் கேட்பாயாக. பாரதப் போரில் இருபக்கத்துப் படைகளுக்கும் உணவளித்தவன் உதியன் சேரலாதன் என்னும் மன்னன். அவன் வழியில் தோன்றியவன் மாந்தரஞ் சேரல் என்பவன். இவன் அறமும் திருவும் ஆற்றலும் கொடையும் மிகுந்தவன். இவனுடைய பெருமையைக் கேட்டுச் சோழநாட்டில் இருந்து பராசரன் என்னும் மறையோன் பல ஊர்களையும் காட்டையும் மலையையுந் தாண்டி வஞ்சிநகரை யடைந்தான். அங்குத் தன்னுடைய கல்வித் திறமையைக் காட்டினான். பராசரனுடைய கல்வித் திறமையைக் கண்ட சேரன் அவனுக்குப் பெரும் பரிசுகள் அளித்தான். பராசரன் சேரன் வழங்கிய பரிசுகளைப் பெற்றுக் கொண்டு தன்னுடைய ஊரை நோக்கி வந்துகொண்டிருந்தான். வரும் வழியில் இடையே பாண்டியனுடைய ஆளுகைக்குட்பட்ட திருத்தங்கால் என்னும் ஊரிலே சிறிதுபோது இளைப்பாறினான். அப்பொழுது அங்குப் பல பார்ப்பனச் சிறுவர்கள் விளையாடிக் கொண்டிருந்தனர். அவர்களைப் பார்த்துப் பராசரன், 'நான் சொல்லும் சுருதியை என்னுடன் சரியாக யார் சொல்லுகின்றீர்களோ அவர்களுக்குத் தகுந்த பரிசு வழங்குவேன்' என்றான். அப்பிள்ளைகளுள் வார்த்திகன் என்பவனுடைய மகன் தட்சணாமூர்த்தி என்

பவன், பராசரன் கூறிய மறையை அவனுக்கு இளைக்காமலும், சுருதி பிழையாமலும் தெளிவாகச் சொன்னான். பராசரன் அச் சிறுவனை வியந்து புகழ்ந்து அவனுக்கு முத்துப்பூணூல், விலைபெற்ற அணிகலன்கள், கடகம் தோடு, பொருள் முதலியவைகளைப் பரிசளித்துச் சென்றான்.

தட்சணாமூர்த்தி பெற்ற பொருளைக் கண்டு ஊர்க்காவலர்கள் பொறாமைப்பட்டனர். வார்த்திகன்மீது களவுக் குற்றம் கற்பித்து அவனைக் காவலில் வைத்தனர். இவ்வாறு வார்த்திகனைக் காவலில் வைக்கவும், அவன் மனைவி கார்த்திகை கதறியழுதாள். அவ்வுத்தமி கண்ணீர் சிந்தியபடியால் காளி கோவிற் கதவு திறக்கப்படாமற் போய்விட்டது. இச் செய்தியை அறிந்த பாண்டியன் என் ஆட்சியில் ஏதேனும் தவறு நிகழ்ந்தது போலும் என்று கருதி நன்கு விசாரித்தான். வார்த்திகன் சிறையிடப்பட்ட செய்தி தெரியவந்தது. உடனே அவனைக் காவலில் இருந்து நீக்கித் தகுந்தபடி அவ் வார்த்திகனுக்குச் சிறப்புச் செய்து அவனிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டான். உடனே காளி கோவிலும் திறந்தது. வழிபாடு முதலியனவும் வழக்கப்படி நடந்தது. அத்தகைய மன்னன் இப்போது அறமுறை தவறியது அவனுடைய குற்றமன்று. பழவினையின் விளைவே யாகும்.

## சோதிட மொழி

'ஆடித்திங்கள் கிருட்டிணபக்கம் பரணி கார்த்திகையுடன் கூடிய வெள்ளிக்கிழமை அட்டமித் திதியில் புகழ்பெற்ற மதுரையைத் தீ உண்ணும்; அரசும் கேடடையும்' என்று சோதிட மொழியும் உண்டு.

அதனாலேதான் அரசன் அழிய மதுரையும் இவ்வாறு அழிந்தது.

## கோவலன் பழங்கதை

கலிங்க நாட்டிலே, வசு என்றும் குமரன் என்றும் இரண்டு அரசர்கள் இருந்தனர். வசு சிங்கபுரத்தரசன், குமரன் கபிலபுரத் தரசன். இருவரும் பங்காளிகள். இருவரும் ஒருவரை ஒருவர் பகைத்திருந்தனர். ஒருவர் எல்லையில் மற்றவருடைய ஆணைக்குட்பட்டவர்கள் செல்லுவதில்லை. சங்கமன் என்ற ஒருவணிகன் பொருளின்மீது ஏற்பட்ட அவாவால் பலவகையான அணிகலன்களைத், தன் மனைவி நீலியோடு சிங்கபுரத்துக் கடைத் தெருவிற்குக் கொண்டு சென்று விலை கூறிக்கொண்டிருந்தான். அப்போது அந்த நகர அரசனாகிய வசுவினுடைய ஏவலனாகிய பரதன் என்பவன், பகையரசனாகிய குமரனுடைய ஒற்றன் இவ்வாறு மாறுவேடத்தி லுள்ளான் என்று கூறிச், சங்கமனைப் பிடித்து அரசனிடம் கொடுத்துக் கொலை செய்துவிடச் செய்தான். கொலையுண்ட சங்கமன் மனைவி நீலி என்பவள் பலவகையாகப் பதினான்கு நாட்கள் கதறி ஒருமலையின் மீது ஏறி உயிரை மாய்த்துக் கொண்டாள். அவள் அப்போது, "எனக்கு இக்கேட்டினை உண்டாக்கியவர்கள் மறுமையில் தாமும் இத்தகைய துன்பத்தைப் பெறுவார்களாக", என்றுகூறிஉயிர்விட்டாள். அவளுடைய வாக்குத்தான் உங்கட்கு இத்தகைய துன்பத்தை உண்டாக்கியது. நீ இன்னும் பதினான்கு நாளையில் உன் கணவனைக் காண்பாய்' என்றுகூறி மதுராபதி மறைந்தது.

கண்ணகியானவள் இரவு பகலென்று பாராமல், மேடுபள்ளம் என்று நோக்காமல், வையைக் கரை வழியே மேற்கு நோக்கி நடந்து, 'நெடுவேள் குன்றம்' என்றும், திருக்கொடி மாடச் செங்குன்றூர், எனவும் வழங்கும் திருச்செங்கோட்டு மலையை அடைந்து அதன் மேல் ஏறினாள்.

மதுரைக்காண்டம் முற்றிற்று.

# வஞ்சிக் காண்டம்

## 24 குன்றக்குறவர்கள் கூத்து

மலைமீது ஓர் அழகிய வேங்கை மரம் பொன்போல் பூத்து நின்றது. மலைமீது ஏறிய கண்ணகி அவ் வேங்கை மரத்தின் நிழலில் சென்று தன்னுடைய வினைப் பயன்களையெல்லாம் எண்ணி ஏங்கினாள். அவ்வாறு அவள் நின்றுகொண்டிருக்கும்போது, அக்குன்றவாணராகிய குறப்பெண்கள் சிலர் அங்கு வந்தனர். அவர்கள் கண்ணகியைக் கண்டு, "எங்கள் வள்ளியம்மையைப் போல் விளங்கும் தாங்கள் யாவர்? நாங்கள் இம்மலையிலே வாழ்பவர்கள். தினைப்புனத்தின்கண் குருவிகளையோட்டியும், கிளிகளைக் கடிந்தும், குன்றின் அருவியிலே நீராடியும் சுனைகளில் படிந்தும் வருகின்றோம்" என்றனர்.

அவர்கள் அவ்வாறு வினவியதைக் கண்டு சீற்றமடைந்திலள். "கண்ணகி தீவினையின் பயனாக அழகிய மதுரையோடு அரசனும் அழியும்படி செய்து கண

வனையும் இழந்துவிட்டு வந்த கடுமையான வினையை யுடையவள் யான்" என்றாள். இவ்வாறு கண்ணகி கூறியதைக்கேட்ட அவர்கள் அஞ்சி அவளை வணங்கி எதிர்நின்றனர். அப்போது ஒரு விமானம் விண்ணில் நின்றும் கீழே இறங்கியது. அதனில் கோவலன் அமர்ந்திருந்தான். விண்ணவர் மலர்மாரி பெய்தனர். கண்ணகியைக் கோவலனோடும் அவ்விமானத்திற்கொண்டு சென்றனர்.

> தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுவாளைத்
> தெய்வந் தொழுந்தகைமை திண்ணிதால்—தெய்வமாய்
> மண்ணக மாதர்க் கணியாய கண்ணகி
> விண்ணகமா தர்க்கு விருந்து.

கண்ணகி இவ்வாறு விண்ணகம்புக்க காட்சியினை மலைக்குறமங்கையர் கண்டு மருண்டு திகைத்து நின்றனர். அவர்கள் இச்செய்தியினைக் குன்றவாணர்கள் அனைவருக்குங் கூறினர். உடனே குன்றவாணர்கள் ஒருங்கு திரண்டனர். ஒருங்கு திரண்ட அவர்கள் "நம் குலத்திற்கு இவளைப்போலஒருபெரிய தெய்வம்வேறு இல்லை. ஆதலின்சிறுகுடியிலுள்ளநமராங்காள் இவளைத் தெய்வமாகக்கொள்ளுவோம் வாருங்கள்" என்று ஒருவரையொருவர் கூவியழைத்துத் திரண்டனர். ஒரு கொங்கையை யிழந்த இம்மங்கைத் தெய்வத்தின் மாதிருவருளால் நம் பெருமலை வளம் பெருகவேண்டும். ஆதலின், தொண்டகப்பறையினையும் சிறுபறையினையும் வாசியுங்கள். ஊது கொம்புகளை வாயில் வைத்து ஊதுங்கள். ஒலிமிகுந்த மணிகளை அடியுங்கள். குறிஞ்சிப்பண்ணினைப் பாடுங்கள். மணமுள்ள அகிற்புகையை ஏந்துங்கள். பூப்பலி யிடுங்கள். காப்புக் கட்டுங்கள்.

இவ்வாறு கூறிக்கொண்டு விழா நடத்தினர். அவ் விழாவிலே

1. சீர்கெழு செந்திலும் செங்கோடும் வெண்குன்றும்
ஏரகமும் நீங்கா இறைவன்கை வேலன்றே
பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே.

2. அணிமுகங்கள் ஓராறும் ஈராறு கையும்
இணையின்றித் தானுடையான் ஏந்தியகை வேலன்றே
பாரிரும் பௌவத்தின் உள்புக்குப் பண்டொருநாள்
சூர்மா தடிந்த சுடரிலைய வெள்வேலே.

3. சரவணப்பூம் பள்ளியறைத் தாய்மார் அறுவர்
திருமுலைப்பால் உண்டான் திருக்கைவேல் அன்றே
வருதிகிரி கோலவுணன் மார்பம் பிளந்து
குருகு பெயர்க்குன்றம் கொன்ற நெடுவேலே.

என்பன முதலிய பல பாடல்களைப் பாடினர், தம்மன் னனாகிய சேரன் அறம் விளங்கப் பல்லாண்டு வாழ்க வென வாழ்த்தினர்.

## 25. சேரன் மலைவளங் காணல்

இமயமலையின்கண் தனது கொடியாகிய வில்லை எழுதிய சேரர் குடியிற் பிறந்தவன் சேரன் செங்குட் டுவன். நீராவியினையுடைய வெள்ளி மாளிகையின் கண் இவன் தன்னுடைய தேவியாகிய வேண்மாள் என்பவளுடனே அமர்ந்திருந்தான். அப்போது அவன் தன்னுடைய தேவியைப்பார்த்து, "ஒலிக்கின்ற முழவைப்போல மலையருவிகள் முழங்கிச் செல்லும் சோலைமலை வளத்தை யாம் சென்று காண்போம்"

என்று கூறினன். பெண்கள் கூட்டமும் தேவியும் தன்னைப் பின்தொடரப் புறப்பட்டான்.

மலை வளங்காணப் புறப்பட்ட சேரமன்னனாகிய செங்குட்டுவன் 'தேவமகளிரோடு விளையாடலை விரும்பிச் செல்லுகின்ற தேவேந்திரனைப் போன்று அழகிய பூங்காவினையும் நீரொழுகும் யாற்றுப் பரப்பினையும் ஆற்றிடைக் குறையையும் இளமரக்காவினையும் நாடகசாலைகளையும் மண்டபங்களையும் ஒருங்கு பரப்பிக்கொண்டு சென்றான்.

சென்ற செங்குட்டுவன் கோங்கும் வேங்கையும் பூங்கொத்துக்களையுடைய கொன்றையும் சுரபுன்னையும் மஞ்சாடியும் நல்ல வயிரங்கொண்ட சந்தனமும் ஆகிய மரங்கள் உதிர்ந்த பூக்களின் பரப்பினால் நீர் கரந்து ஒழுகி, மதுகரத்தோடும் ஞிமிரோடும் வண்டுக் கூட்டங்கள் இசைபாட, திருமாலின் மார்பின்கண்ணுள்ள மாலை போலப்பெரியமலையினைக் குறுக்கிட்டுச் செல்லும் பேரியாறு என்னும் ஆற்றின் கரையிலே சென்று உடன்வந்தாரொடுந் தங்கியிருந்தான்.

அம்மலையின் ஓரிடத்தில் குறவர்கள் குரவைக்கூத்தாடினர்; குறத்தியர் பாடினர். வேலனுக்கு வெறியாட்டயர்ந்தனர். தினை குற்றுகிற பெண்கள் உலக்கைப் பாட்டுப் பாடினர். தினைப்புனங்களில் கிளி முதலிய பறவைகளை ஓட்டுவார் ஒலி மிகுந்தன. தேன் கூட்டிலிருந்து தேனையெடுக்கும் குறவர்கள் முழக்கம் ஒருபால் ஓங்கின. போர்ப்பறை முழங்குதலையொப்ப மலையருவிகள் அச்சம் தரும்வண்ணம் முழங்கியது. புலியும் யானையும் போர்செய்து உறுமின. புனங்காப்போர் பரண்மீதமர்ந்து ஆலோலத்துடன் பறவையோட்டினர். குழிக்கண் விழுந்து அகப்பட்டுக்

கொண்ட யானையைப் பாகர்கள் மேலே சேர்க்கும் ஒலி யொரு பால் எழுந்தது. மேற்கூறிய ஒலிகளுடன் செங்குட்டுவனது படையொலியுஞ் சேர்ந்து அம்மலையிடமெல்லாம் ஒலித்தன.

மலைக்குறமக்கள் செங்குட்டுவனது வரவை அறிந்தனர். அளவிட்டறிய முடியாத அருங்கலங்களைத் தாங்கி வந்து பல செல்வமும் மிகுந்த செங்குட்டுவனது அரண்மனை முற்றத்திடத்தே அரசனது செவ்வியை எதிர்நோக்கிக் காத்திருக்கும் அரசர்களைப்போல அம்மலைக்குறவர் வந்தனர். அவர்கள் யானைத்தந்தம், அகிற்குவியல், வெண்சாமரை, தேன் குடங்கள், சந்தனக்கட்டைகள், சிந்தூரக் கட்டிகள், அஞ்சனத் திரள், அரிதாரம், நீலக்கல், கத்தூரி, ஏலக்கொடி, மிளகுகொடி, கூவைக்கிழங்கின்மா, கவலைக்கிழங்கு, தேங்காய், இனிய மாங்கனி, பச்சிலைமாலை, பலாப் பழம், வெள்ளுள்ளி, கரும்பு, பூங்கொடி, பாக்குக்குலை, வாழைப்பழத்தாறு, ஆளிக்குட்டி, சிங்கக்குட்டி, புலிக் குட்டி, யானைக்குட்டி, குரங்குக்குட்டி, கரடிக்குட்டி, மான்குட்டி, கத்தூரிக்குட்டி, புனுகுபூனைக்குட்டி, கீரிப்பிள்ளை, மயில், காட்டுக்கோழி, கிளி முதலியவை களை மன்னவனுக்குக் காணிக்கையாகச் சுமந்துவந்தனர். அவைகளை அரசன் முன்னே வைத்து, "அரசே, ஏழுபிறப்பும் யாங்கள் நினக்கு அடிமையாவேம். நினது வெற்றி வாழ்க" என்று வாழ்த்தினர். பிறகு அவர்கள் செங்குட்டுவனை நோக்கி; இம்மலைக் காட்டி லுள்ள வேங்கை மரத்தின் நிழலில் ஒருகொங்கையை யிழந்த மங்கையொருத்தி வந்தாள். அவள் இவ்வுலகில் பிறந்த எவரும் அடையாத துன்பத்தை யடைந்தாளாம். அவள் எந்த நாட்டினளோ! எவருடைய

மகளோ தெரியவில்லை. அவள் தேவர்கள் போற்றத் துறக்கம் புகுந்தாள் தன் கணவனுடன். நாங்கள் நின்னுடைய நாட்டிலே இத்தகைய காட்சியை நினைப்பினும்கூட நினைத்திருக்க மாட்டோம். பலநூறாயிரம் ஆண்டு நீ வாழ்வையாக, என்று கூறி மீளவும் வாழ்த்தினர்.

அப்போது சேரன் செங்குட்டுவனுடனிருந்த மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனார் செங்குட்டுவனை நோக்கி, "அரசே! நான் இச்செய்தியை அறிவேன். நடந்ததைக் கேட்பாயாக" என்று கூறிச் சிலம்பு காரணமாகக் கோவலனுக்கு நேர்ந்த துன்பத்தினையும், பாண்டியன் முன்னர்க் கண்ணகி ஒரு சிலம்புடன் சென்று வழக்காடியதனையும் அதனால் பாண்டியன் இறந்ததனையும்,பின்னர்க் கண்ணகி மதுரைமூதூரினைச் சுட்டழித்ததனையும் பின்னர் ஆங்கடைந்து விண்ணகம் புக்கதனையும் உரைத்தார். சாத்தனார் கூறிய செய்திகளைக் கேட்ட செங்குட்டுவன் வருந்தினான். அவன் சாத்தனாரைப் பார்த்துப் பாண்டிய மன்னன் தன்னுடையஉயிரைக்கொடுத்து வளைந்துபோன செங்கோலை நிமிர்த்தினான். மழைவளங் குன்றலாலோ மற்றெதனாலோ உயிர்கள் வருத்தமுறின் மன்னனுக்குப் பெருந்துன்பம் உண்டாகும். கொடுங்கோலுக்கஞ்சி உலகத்தைக் காக்கும் அரசர் குடியிற் பிறத்தல் துன்பந்தருமே யல்லால் இன்பத்தினைத் தராது? என்று அரசாட்சித் துன்பத்தை யுரைத்தான்.

பின்னர்ச் செங்குட்டுவன் தன்னுடைய மனைவியாகிய இருங்கோவேண்மாளை நோக்கித், 'தன்னுடைய கணவன் இறந்தமை கண்டு அப்பொழுதே இறந்துபட்ட பெருங்கோப் பெண்டு, கணவனை

இழந்த துன்பத்துடன் இங்குப் போந்து விண்ணகம் புகுந்த கண்ணகி ஆகிய இவர்கள் இருவருள் மிகவும் போற்றத்தக்கோர் யார்?" என்று கேட்டான். "தன் கணவன் இறந்த துன்பத்தினை யறியாது உடனிறந்த கோப் பெருந்தேவி துறக்கத்திலே கணவனோடு இனிது வாழ்வளாக. நாம் நமது பெரிய நாட்டை யடைந்த இந்தப் பத்தினிக் கடவுளைப் போற்றுதல் வேண்டும்" என்றாள் அரசி.

செங்குட்டுவனும் தன்னுடைய மனைவி கூறிய படி, பத்தினிக் கடவுள் கோயில் அமைத்து உரு நாட்டி வழிபடுதலை விரும்பித் தன்னுடைய அமைச் சரை நோக்கினான். அரசனது குறிப்பை யறிந்த அமைச்சர்கள், "பத்தினிக் கடவுளின் வடி வமைத்துப் போற்றற்குப் பொதிகை மலையில் கல் எடுத்துக் காவிரியாற்றில் நீராட்டலாம். அல்லது இமயமலையில் கல் எடுத்துக் கங்கை யாற்றில் நீராட்டலாம்" என்ற னர். அதற்குச் செங்குட்டுவன்" பொதிகையிற் கல் எடுத்துக் காவிரியின்கண் நீராட்டுதல் வீரக்குடியிற் பிறந்த எமக்குச் சிறந்த செய்கையன்று. மலையரச னுவான் இளமைக் காலத்திலேயே பெருஞ் சிறப் படைந்த கண்ணகி தேவியின் வடிவத்தை அமைத் தலுக்கு ஒரு கல் கொடானாயின் அவனை யெதிர்த்துப் போர் செய்து வெற்றி மாலை சூடுவேம்' என்றனன்.

அப்போது அங்கிருந்த வில்லவன் கோதை என் னும் அமைச்சனவன் எழுந்து 'அரசே, நின்கொற் றம் பல்லாண்டு வாழ்க. பழைய நாளில் கொங்கணர், கலிங்கர், கருநாடர், பங்களர், கங்கர், கட்டியர், வட ஆரியர் முதலாயினோர் உன்னுடைய படையுடன் போரிட்ட காலத்தில் நீ உனது யானையைவிட்டு அப்

போரிடத்துக் கலக்கிய வீரச்செயல் என் கண்ணை
விட்டுப் பிரியவில்லை. அல்லாமலும் உன்னைப்
போன்ற தமிழரசர்களுடன் கொங்கணருடைய
போர்க்களத்தில் நீ போர் செய்த நாளில் புலிக்கொடி
யையும் மீன்கொடியையும் சோழ பாண்டியர்கள் இழ
ந்து ஓடியசெய்தி யானைகளின் செவிகளிலும் சென்று
முழங்கியதன்றோ? மேலும், நின் தாயாரைக் கங்கையாற்
றில் நீராடச் செய்த காலையில் ஆங்கு எதிர்த்த ஆரிய
அரசர் ஆயிரம்பேர்களையும் வெற்றிகொண்ட நினது
ஆண்மையைக் கண்டு கூற்றுவனும் அஞ்சினா
னன்றோ? இத்தகைய வெற்றி வேந்தனாகிய நீ இப்
போது இமயஞ்செல்ல எண்ணுவது ஒரு கல்சிலையின்
பொருட்டேயாதலின், இதைக் குறித்து வடநாட்டு
அரசர்களுக்குத் தமிழ்நாட்டு வில்லும் கயலும் புலி
யும் பொறித்த முத்திரையிட்டு நின்னுடைய ஓலை
போக்குதல் தக்கதாம்' என்று உரைத்தான்.

அப்பொழுது அங்கிருந்த அழும்பில்வேள் என்
னும் சிற்றரசன் 'பல நாட்டு ஒற்றரும் நமது தலைநக
ரில் இருக்கின்றார்களாதலின், இச் செய்தியை யானை
யின் மேல் முரசேற்றித் தெரியப்படுத்துவதே
போதும். செய்தியை ஒற்றர்கள் தம் அரசருக்குத்
தெரிவிப்பார்கள்' என்றான். இவ்வாறே செய்யலாம்
என்றான் செங்குட்டுவன். அனைவரும் வஞ்சிநகரை
யடைந்தனர். அரசன் கட்டளைப்படி பறையறை
வோன் 'எம்முடைய அரசன் கல் கொணருதல்
பொருட்டு இமயமலைக்கு எழுகின்றான். வடநாட்டர
சர்கள் அனைவரும், கொடுக்க வேண்டிய திறைப்
பொருளுடன் வந்து அரசனைக் கண்டு வணங்குங்கள்.
அவ்வாறு வணங்கமாட்டீர்களாயின், கடற்கடம்பை

வெட்டிய போரினைக் குறித்த செய்தியையும் இமயத்தில் வில்லைப் பொறித்த செய்தியையும் தெரிந்து கொள்ளுங்கள். அவ்வாறு தெரிந்து கொள்ளவும் மாட்டீர்களாயின் துறவுக்கோலம் பூண்டு வாழுங்கள். அரசனுடைய உறுப்பாகிய போர்முகம் வாழ்வதாக' என்று வஞ்சி நகரம் எவ்விடத்தும் பறைசாற்றினன்.

## 26. கல் கொண்டு வரத்தொடங்கல்

பறை யறையப்பட்டபின் அரசன் அரசுகட்டிலில் ஏறினன். ஆசானும், பெரிய நிமித்திகனும், அமைச்சரும், படைத் தலைவர்கள் முதலியோரும் ஒன்றுகூடி அரசனை வாழ்த்தி அவன் கூறும் மொழிகளைக் கேட்டிருந்தனர்.

அப்போது அரசன் படைத்தலைவர்களைப் பார்த்து, 'இமயமலையில் நின்று நீராட வந்த முனிவர்கள், கனகன் விசயன் என்னும் இரண்டு ஆரிய அரசர்கள் நம் தமிழரசர் ஆற்றலை இழிவாகக் கூறியதாகக் கூறினார்கள். தமிழரசர் வலிமையை அவர்கள் அறியார்கள்போலும். அவர்கள் அவ்வாறு இகழ்ந்தது தமிழரசர்கள் அனைவரையுமே சாரும் ஆதலின் பத்தினிக்கடவுள் செய்யக் கொண்டுவரும் கல்லை, அவ்வடநாட்டரசர் தலையில் வைத்துக் கொண்டு வரும்படி செய்யா தொழியின், நான் பகையரசனை ஒடுக்காது குடிகளை அஞ்சச் செய்யும் கொடுங்கோல் மன்னனைப் போன்றவனாவேன்' என்றான். அப்போது கணிதநூல் வல்லானாகிய நிமித்திகன் எழுந்து அரசனைப் பார்த்து, 'அரசே! நும் கொற்றம் வாழ்க. இப்போது உனக்கு நல்லவேளையாக அமைந்துள்ளது. நீர்

வெற்றிபெற வேண்டுதியாயின் இப்பொழுதே புறப்படுவாயாக' என்றான். கணி கூறியதைக் கேட்ட செங்குட்டுவன் 'உடனே வடதிசையை நோக்கி வாளையும் குடையையும் எழுச்சி செய்வீராக' என்றான். களம்பாடுவோர் பேராரவாரம் செய்து எழுந்தனர். முரசம் எழுந்து ஒலித்தது. ஐம் பெருங் குழுவினரும், எண்பேராயத்தினரும், கரும வினைஞரும், தந்திர வினைஞரும் ஆகியவர்களெல்லாரும், 'மண்திணி ஞாலம் ஆள்வோன் வாழ்க' என்று வாழ்த்தினர். அரசன் படைத் தலைவர்கட்கு விருந்து நடத்தினான். பின்னர்ப் பூவாவஞ்சியில் பூத்தவஞ்சியை முடியிற்சூடினான். திறைகொண்டுவரும் சிற்றரசரை அழைக்கும் காலை முரசம் கடைவாயிலில் முழங்கியது. அரசன் சிவபிரானை வணங்கிப் புறப்பட்டான். அப்போது சிலர் ஆடகமாடத்தின்கண் அறிதுயில்கொள்ளும் திருமாலின் வழிபாட்டுப் பொருளைக் கொண்டு வந்து அரசனிடம் கொடுத்து அவனை வாழ்த்தினர். தன் மணி முடியில் சிவபெருமானின் திருவடிமலரைத் தாங்கியிருத்தலின், திருமாலின் வழிபாட்டுப் பொருளைத் தனது அழகிய தோளில் தாங்கினான். நாடக மகளிரும், இருந்தேத்துவாரும், வைதாளிபாடுவாரும், நின்றேத்துவாரும் புகழ்ந்து வாழ்த்தினர். யானை வீரரும் குதிரை வீரரும்போர்வீரரும் அரசனுடைய வெற்றியைப் புகன்று உடன் சென்றனர். சேரன் செங்குட்டுவன் அவ்வாறு செல்லுங் காட்சியானது விண்ணவர் கோமான் அவுணரிடத்திற்குப் போர் புரியச் செல்வதைப்போன்றிருந்தது. பலவகைப் படைகளும் உடன் தொடரப் புறப்பட்ட செங்குட்டுவன் நீலகிரியை அடைந்து ஆங்குத் தங்கினான்.

செங்குட்டுவன் தங்கியிருந்த இடத்தில் படைகளின் ஒலி மிகுதியாக எழுந்தது. அப்பொழுது விண்ணின்கட் சென்றுகொண்டிருந்த சில முனிவர்கள் படையொலியைக் கேட்டு நிலத்திற்கு இறங்கிவந்தனர். அரசன் அம்முனிவர்களை வணங்கினான். அம்முனிவர்கள் அரசனை வாழ்த்தி 'இமயமலைக்குச் செல்லுகின்ற நீ ஆங்குள்ள அந்தணர்களைக் காப்பது கடன்' எனக் கூறிச் சென்றனர். பிறகு கொங்கணக் கூத்தரும், கருநாடரும் இசைத்துக் காட்டிய ஆடல் பாடல்களைப் பார்த்து அவர்களுக்குப் பரிசு வழங்கியிருந்தான்.

அப்போது நூற்றுவர் கன்னர் அனுப்பிய தூதுவர்க்குத் தலைவனாகிய சஞ்சயன் நாடகமகளிர் ஐம்பத்திருவரும் குயிலுவர் இருநூற்றெண்மரும் நகைவேழம்பர் நூற்றுவரும் உடன்வர அரசனை வந்து கண்டு வணங்கிப் போற்றினான். அவன் செங்குட்டுவனை நோக்கி 'உம்முடைய நண்பர் நூற்றுவர் கன்னர் நூறு தேர்களும், ஐந்நூறு யானைகளும், பதினாயிரம் குதிரைகளும், பல பொருள்களை யேற்றிய இருபதினாயிரம் வண்டிகளும் நினக்குத் திறைப் பொருளாக எம்முடன் அனுப்பியுள்ளனர். மேலும் அவர்கள் "அரசர்பெருமான் இமயம் செல்வது ஒரு கல்லின் பொருட்டேயாதலின், அதனை யாங்களே எடுத்து நீர்ப்படை செய்து தருவோம்" என்றும் நின்முன்னர்க் கூறச் சொல்லினர்' என்றும் கூறினான். சஞ்சயன் கூறியவற்றைக் கேட்ட செங்குட்டுவன், 'ஓ சஞ்சயனே! ஆரியமன்னனாகிய பாலகுமரனின் மக்கள் கனகனும் விசயனும் தமிழரசர்களை இழிவாகக் கூறினராம். அதனாற் சீற்றமடைந்து செல்கின்றது நமது

படை. இதனை நூற்றுவர் கன்னர்க்கு நுவல்வாயாக. கங்கையாற்றைக் கடத்தற்கு வேண்டுவனவாகிய ஓடங்களையும் அமைக்குமாறு கூறுவாயாக' என்று கூறிச் சஞ்சயனை அனுப்பினான். அப்போது மொழி தவறாத நாவினையுடையவராகிய தூதர்கள் சந்தனக் குவியலையும் கடல் முத்தையும் தென்னவன் கொடுத்த திறையெனக் கொண்டு வந்தனர். அதனைத் தான் மகிழ்வுடன் பெற்றுக்கொண்டமை குறித்து முடங்கல் எழுதித் தூதரிடம் கொடுத்தனுப்பினான்.

பின்னர் மன்னன் அங்கிருந்து புறப்பட்டான். வழியிலுள்ள மன்னர்களின் வரவேற்பையெல்லாம் பெற்றுக் கொண்டு இறுதியில் கங்கைக் கரை யடைந்தான். ஆங்கு நூற்றுவர் கன்னர் பல தோணி களை அமைத்திருந்தனர். அவற்றின் உதவியால் ஆற் றைக் கடந்து அனைவரும் அக்கரை யடைந்தனர். ஆண்டு நூற்றுவர் கன்னர் போற்றத் தங்கியிருந்தான்.

அந்நாட்டு மன்னர்களாகிய உத்தரன் விசித்திரன் உருத்திரன் பைரவன் சித்திரன் சிங்கன் தனுத்திரன் சுவேதன் என்று கூறப்பட்டோரனைவரும் கனகவிசய ருடன் சேர்ந்தவர்களாகித் 'தமிழ் மன்னரது ஆற்ற லைக் காண்போம்' என்று கூறி வந்து எதிர்த்தனர். செங்குட்டுவன் பசி கொண்டு இரை தேட எழுந்த சிங்கம் யானைக் கூட்டத்தைக் கண்டு மனமகிழ்ந்து அவற்றின்மேற் பாய்வது போலப் பாய்ந்து அவ்வா ரியப்படையைச் சிதற அடித்தான். இவ்வளவு உயிர் களையும் கூற்றுவன் ஒரே நாளில் உண்ணுந் திறமை யுடையவன் என்பதை ஆரியமன்னர் அப்போர்க்களத் தில் அறிந்தனர்.

இப்போர் முனையில் கூற்றுவனுக்கு இரையாகாமல் எஞ்சிய ஆரிய வீரர்கள், புறமுதுகிட்டோடிச் சடைமுடிக் கோலமும் துறவிக்கோலமும் கூத்தாடிக் கோலமும் மற்றுந் தமக்குத் தெரிந்த பல்வேறு வகைத் தொழிற் கோலமும் பூண்டு மறைந்தனர். தமிழரசரை இகழ்ந்துரைத்த கனக விசயரும் மற்றும் ஐம்பத்திருவரும் பிடிபட்டனர். அரசன் தன்னுடைய அமைச்சனாகிய வில்லவன் கோதையுடன் படைகளையும் அனுப்பிக் கண்ணகியின் வடிவஞ் செய்தலுக்குத் தக்க கல் கொண்டு வரச் செய்தனன்.

---

## 27. கல்லை நீராட்டுதல்

இமயமலையில் எடுத்த கல்லினைக், கனகவிசயருடைய தலையில் ஏற்றிக், கங்கைக் கரைக்குக் கொண்டு வந்து நீராட்டல்முறையினை மறைவழியுணர்ந்த நூல்வல்லார்கள் கூறியபடியே நீராட்டி பின்னர்க் கங்கையின் தென் கரையில் பாசறை அமைத்து அதில் தங்கினான். ஆரிய அரசர் செங்குட்டுவனுக்கு வேண்டியவைகளைப் புரிந்தனர். செங்குட்டுவன் தான் செய்த போரில் இறந்து பட்டவர்களுக்கும் மற்றையோருக்கும் மேன்மைப் பாடுகள் செய்து போற்றினான். இவ்வாறு அரசன் செய்துவிட்டு இனிதமர்ந்திருந்தான். அப்போது மாடலன் என்னும் ஓர் அந்தணன் செங்குட்டுவன் முன்னர்த் தோன்றினான். அம்மறையோன் அரசனை வாழ்த்தி 'மாதவியின் கானல் வரிப்பாட்டுக் கனகவிசயரின் முடித்தலையை நெரித்தது' என்றான். இதனைக் கேட்ட செங்குட்டு

வன் வியப்படைந்து, நீ கூறியதன் பொருள் யாது? நீ கூறியது வேடிக்கையாக இருக்கின்றதே' என்றான்.

அதற்கு அம்மாடல மறையோன், 'மன்னவர் மன்ன, யான் கூறுவதைக் கேட்பாயாக. காவிரிப்பூம் பட்டினத்திலிருந்த கோவலன் என்பான், தன் காமக் கிழத்தியுடன் கடல்விளையாட்டுக் காணச் சென்றிருந்தான். அப்போது கோவலனுடைய காதற் பரத்தை கானல் வரி பாடினாள். அவள் வேறொருவன் மேல் மனம் வைத்துப் பாடினாள் என்று கோவலன் தவறாக எண்ணி, அவளைப் பிரிந்து தன் மனையை யடைந்தான். தன் மனைவியுடன் மதுரை வந்து காவலனாற் கொலையுண்டான். அவன் மனைவி கண்ணகி நினது நாட்டை யடைந்தாள். அவளுக்கு உருவக்கல் அமைத்தற்காகவே நீ இங்கு வந்தாய். அக்கல்லைச் சுமந்து கனகவிசயர்தம் முடித்தலை நெரிந்ததன்றோ? இவற்றைத்தான் யான் கருத்துட்கொண்டு அவ்வாறு கூறினேன். நான் பொதியமலையை வலஞ்செய்து குமரிக்கடல் படிந்து திரும்பி வந்தேன். வந்த யான் மதுரைக்குச் சென்றேன். அவ்விடத்தில் சிலம்பு காரணமாகக் காவலனாற் கோவலன் கொலையுண்டதும், பாண்டியன் இறந்தொழிந்ததும், மதுரை நகர் எரிந்து தொலைந்ததும், மாதரி தீக்குளித்ததும், கவுந்தியடிகள் உண்ணாவிரதமிருந்து உயிர் விட்டதும் ஆகிய செய்திகள் தெரியலாயின. தெரிந்த யான் ஊருக்குச் சென்றேன். அங்கு என்னைக் காணவந்தார்களுடன் இச் செய்தியையெல்லாம் இயம்பினேன். இச் செய்தி விரைவில் எங்கும் பரவிற்று. இதனைக் கோவலன் கண்ணகி யிருவருடைய உற்றார் பெற்றாரும் அறிந்தனர். அவர்கள் அடைந்த துன்பம் அளவிடுந்தரத்த

தன்று. கோவலன் தந்தை கொடுந்துயரெய்தித் தன் பெருஞ் செல்வங்களையெல்லாம் பலர்க்கும் வழங்கி விட்டுப் புத்தமதத் துறவியானன். கண்ணகி தந்தையும் அவ்வாறே செய்து சமணத்துறவியானன். கோவலன் தாயும் கண்ணகி தாயும் துன்பத்தைத் தாங்கமாட்டாதவர்களாக இறந்தனர். மாதவி தன் மகள் மணிமேகலையுடன் புத்தமதத் துறவியானுள். இதில் இறந்தவர்களும் துறந்தவர்களும் என்னுலேயே அந்நிலையை எய்தின ராதலின், யான் பெருந் தீவினையை அடைந்தேன். அத் தீவினையைப் போக்கற் பொருட்டே கங்கையில் நீராடவந்தேன்" என்றான்.

இவ்வாறு மாடலமறையோன் இயம்பியவை களைக் கேட்ட செங்குட்டுவன்,'நெடுஞ்செழியன் இறந்த பின் பாண்டியநாடு என்னுயிற்று? என்றான். அதற்கு மாடல மறையோன், 'மதுரை தீப்பட்டெரிந்த பிறகு கொற்கையிலிருந்த இளவரசன் வெற்றிவேற்செழியன், கண்ணகிக்கு ஆயிரம் பொற்கொல்லரைப் பலி கொடுத்து அரசு கட்டிலில் ஏறிச் செங்கோல் நடத்துகின்றான்' என்று கூறினன்.

அப்போது மாலைக் காலம் வந்தது. செவ்வானிடத்திலே வெள்ளிய பிறை தோன்றிற்று. அவ்வாறெழுந்ததைச் செங்குட்டுவன் பார்த்தான். அக்காலைக் காலக்கணிதன் எழுந்து 'நாம் வஞ்சி நகரை விட்டுப் புறப்பட்டு முப்பத்திரண்டு திங்கள்களாயின'என்றான். அரசன் நெஞ்சம் வஞ்சியையடைய எண்ணியது. தனது நிறையுள்ள ஐம்பது துலாம் பொன்னை மாடலனுக்குத் தந்தான். கன்னர் நூற்றுவரையும் அவரவர் நாட்டிற்கு அனுப்பினன். தமிழரசரின் ஆற்றலைப் போற்றுது போர்புரிந்த கனகவிசயர்களைச் சோழ

பாண்டியர்களுக்குக் காட்டுக" என்று நீலன் முதலிய தூதர்பால் ஒப்புவித்து அனுப்பினான். பின்னர்த் தனது படை புடை சூழத் தென் திசையை நோக்கிப் பெயர்ந்து தன்னுடைய வஞ்சி நகரை யடைந்தான்.

---

## 28. கண்ணகியின் உருவச்சிலை நாட்டல்

வஞ்சி நகரை யடைந்த செங்குட்டுவன் தன்னரண்மனைக்கண் தேவி வேண்மாளோடு இனிதிருந்தான். நாட்கள் பல சென்றன. ஒரு நாள் அரசவைக்கண் அமர்ந்திருக்கும்போது சோழ பாண்டிய அரசரிடம் கனக விசயரை யழைத்துச் சென்ற நீலன் முதலிய தூதுவரும் மாடலமறையோனும் வந்தனர். நீலன் செங்குட்டுவனை நோக்கி, 'நாங்கள் நின் கட்டளைப்படியே கனக விசயரைக் கொண்டுபோய்ப் புகார் நகரத்துச் சோழனிடம் காட்டினோம். சோழன் தன்னுடைய தேர்ப்படைத் தலைவனைப் பார்த்து, 'பெரிய போர்க்களத்தின்கண், தாம் கொண்டுவந்த வாளினையும் குடையினையும் போகட்டு விட்டு எவரும் கொல்லுதற்கு நினையாத துறவிக் கோலங் கொண்டு ஓடி உயிர்பிழைத்தவரைப் பிடித்துக் கொண்டு இவ்வாறு வருதல் வெற்றியன்று", என்று கூறினான். பின்னர்ப் பாண்டிய அரசனைக் கண்டு அவனிடம் காட்டினோம். பாண்டிய அரசன், "போர்க்களத்தை நும் அரசனிடம் விட்டுவிட்டு உமையொரு பாகத் திறைவனை வணங்கும் தவக்கோலம் தாங்கிய இந்தக் கனக விசயர்கள் மீது மிகுந்த சினத்தினைக் கொண்ட உங்கள் அரசனுடைய வெற்றி புதுமையாக இருக்கிறதென்று, கூறினான்" என்றனர்.

நீலன் கூறியவற்றைக் கேட்ட அளவில் செங்குட்டுவனுக்குச் சினம் மிகுவதாயிற்று. அவன் வெகுண்டு நகைத்தான். அவ்வளவில் அங்கிருந்த மாடலன் அரசனை நோக்கி,'அரசே! நின் கொற்றம் வாழ்க. நீ மிளகு மிகுந்த மலைச்சாரலில் உறங்கும் யானைகளையுடைய வியலூரை வென்றாய். உறையூருக்குத் தெற்கிலுள்ள நேரிவாயிலில் சோழன் மரபைச் சேர்ந்த ஒன்பது சிற்றரசரைப் போரில் வென்றாய். ஆரிய அரசரைக் கங்கைக் கரைக்கண் வென்றாய். நீண்ட மாலையினை யணிந்த பெரும்படையை உடைய வேந்தனே! மெய்ப்பொருளறிந்த மன்னர் மன்னனே! நின் சீற்றம் அடங்குவதாக. நின்னுடைய வாணாள் பொருநையாற்று மணலினும் மிகுவதாக. அரசனே! யான் கூறும் இதனை நீ இகழாது கேட்டருளல் வேண்டும். உனக்கோ அகவை ஐம்பதாகின்றது. இதுவரை நீ போர்க்களங்களில் மறக்கள வேள்வி ஆற்றிவருகின்றாயே அல்லாமல், அறக்கள வேள்வி ஆற்றினாயன்று. ஆக்கையோ நிலையற்றது. உன் முன்னோர்களில் எத்தனையோ பேர் வெற்றிவீரர்களாக விளங்கி இருநிலம் புரந்தனர். அவர்களெல்லாரும் இப்போது எங்கே சென்றனர்? யாவரும் ஒரு நாளைக்கு இறந்தொழிதல் உறுதியே யன்றோ? அல்லாமலும் செல்வம் நிலையற்றதென்பதை ஆரிய மன்னரிடத்து நீ காணவில்லையா? இளமை நிலையாது என்பதை எடுத்துக் கூறவும் வேண்டுமோ? தேவ வடிவத்தோடும் துறக்கம் புகுந்த நல்ல உயிரானது மக்கள் வடிவத்தோடு மீண்டு இவ்வுலகில் வந்து பிறந்தாலும் பிறக்கும். மக்கள் யாக்கையிற் பிறந்த உயிர் விலங்கின் யாக்கையிற் சென்று பிறக்கினும் பிறக்கும். விலங்கினது யாக்கை

யினின்றும் விலகிய இனிய உயிர் நடுங்கற்குக் காரண மாகிய நரகரது யாக்கையை அடைந்தாலும் அடை யும். கூத்தாடுதலுக்குக் கோலஞ் செய்து கொள்பவர் கள் எப்போதும் ஒரே கோலத்துடன் நிலைபெற்றிரா மையைப் போல, இவ்வுயிரும் ஒருட லில்தங்கியிராமல் செய்யும் வினைக்குத் தக்கபடி உழலுமென்பது அறி ஞர்கள் கொள்கை. அரசே! யான் பொருளை விரும்பி இவ்வாறு புகலவில்லை. நின்னை நன்னெறிக்கட் செலுத்துவதே என் விருப்பம். ஆதலினால்தான் யான் இவ்வாறு கூறுகின்றேன். நான்மறையர் அரசருக் கென்று நவிலும் இராச சூய யாகத்தை நீ செய்தல் வேண்டும். அதுவே வீடுபேற்றைத் தரவல்லது. நாம் நற்காரியங்களை உடனே புரிதல் வேண்டும். நாளைக்குச் செய்வோம் என்று இருப்பின், இன்றே உயிர் நீங்கினும் நீங்கும். நம் வாழ்நாள் இவ்வளவா கும் என்று உறுதியாகக் கண்டுபிடித்து வாழ்ந்தவர் கள் இவ்வுலகம் முழுவதினும் ஒருவரும் இலர். ஆகவே, யான் கூறிய வேள்வியை உடனே செய்வா யாக" என்று கூறினான்.

மாடலன் உரையைக் கேட்ட செங்குட்டுவன் சீற் றந் தணிந்தான். வேள்வித் தொழில் அறிந்த மறை யோரை வேள்விக் காவன புரியும்படி ஏவினான். தன் அமைச்சன் வில்லவன் கோதையைப் பார்த்துத் தான் சிறைப்படுத்தி வைத்திருந்த ஆரிய அரசர்களையும் பிறரையும் சிறையிலிருந்து விடுதலை செய்யுமாறு கூறினான்.

கைதேர்ந்த கல் வேலைக் காரர்களால் கண்ணகி யின் உருவஞ் செய்யப் பெற்றுக் கண்ணகிக் கெனக் கட்டப்பட்ட கோயிலில் நிறுத்தப் பெற்றது. அவ்

வுருவத்திற்குப் பல அணிகலன்களைப் பூட்டித் திரு விழா வழிபாடு முதலியன சிறப்புறச் செய்தான் செங் குட்டுவன்.

## 29. கண்ணகி செங்குட்டுவனை வாழ்த்துதல்

கண்ணகிக்குத் திருவிழா முதலியன நடை பெற்ற பின்னரும் செங்குட்டுவனும் அவனுடனிருந் தோரும் கண்ணகி கோயிலிலேயே தங்கியிருந்தனர். கோவலன் மதுரையிற் கொலையுண்டிறந்த செய் தியை மாடலனால் அறிந்து, கோவலன் தந்தையும் கண்ணகி தந்தையும் துறவுக்கோலம் பூண்டு அந் நெறிக்கட் சென்றதும், இவர்களிருவருடைய மனைவி யரும் இறந்தொழிந்தன ரென்றோ? இதன் பின்னர்க் கண்ணகியின் காவற் பெண்ணும், அடித்தோழியும், தேவந்தியும் கண்ணகியைத் தேடிப் புறப்பட்டு மது ரையை அடைந்தனர். மதுரை கண்ணகியின் சினத் தால் எரிந்ததைக் கேட்டனர். பின்னர்க் கோவல னும் கண்ணகியும் தங்கியிருந்த ஆயர் சேரிக்குச் சென்று பார்த்தனர். அடைக்கலத்தை இழந்து உயிர் துறந்த மாதரியின் மகளாகிய ஐயையைக் கண் டார்கள். பின்னர் அவளொடும் புறப்பட்டுக் கண்ணகி சென்ற வைகைக் கரை வழியே சென்று திருச்செங் குன்றி லேறிக் கண்ணகி கோயிலை அடைந்தனர்.

இவர்கள் யாரென்று செங்குட்டுவன் வினவி னன். அதற்குத் தேவந்தி,

முடிமன்னர் மூவருங் காத்தோம்பு தெய்வ
வடபே ரிமய மலையிற் பிறந்து

கடுவரற் கங்கைப் புனலாடிப் போந்த
தொடிவளைத் தோளிக்குத் தோழிநான் கண்டீர்
சோணாட்டார் பாவைக்குத் தோழி நான்கண்டீர்

என்று விடை கூறினாள். கண்ணகியின் வளர்ப்புத் தாயாகிய காவற் பெண்டு,

மடம்படு சாயலாள் மாதவி தன்னைக்
கடம்படான் காதற் கணவன் கைப்பற்றிக்
குடம்புகாக் கூவற் கொடுங்கானம் போந்த
தடம்பெருங் கண்ணகிக்குத் தாயர்நான் கண்டீர்
தண்புகார்ப் பாவைக்குத் தாயர் நான் கண்டீர்

என்று விடையிறுத்தாள். கண்ணகியின் அடித்தோழி,

தற்பயந்தாட் கில்லைத் தன்னைப் புறங்காத்த
எற்பயந் தாட்கும் எனக்குமோர் சொல்லில்லை
கற்புக் கடம்பூண்டு காதலன் பின் போந்த
பொற்றொடி நங்கைக்குத் தோழிநான் கண்டீர்
பூம்புகார்ப் பாவைக்குத் தோழிநான் கண்டீர்

என்று விடையிறுத்தாள்.

பின்னர்த் தேவந்தி மாதரி மகள் ஐயையைக்காட்டி அவள்தான் மதுரையில் கண்ணகியையும் கோவலனையும் கௌந்தியடிகளிடமிருந்து விருந்தினராகப் பெற்ற மாதரி மகள் ஐயை என்றுகூறினாள். இவர்கள் கண்ணகி யடைந்த துன்பநிலை கண்டு பொறாராய் அழுது புலம்பினார்கள்.

இவ்வாறு இவர்கள் புலம்பிக் கொண்டிருக்கும் போது, மேகலையணியும், வளையல்களும், வயிரத்தோடும் மற்றும் பல அணிகலன்களையும் பூண்டவளாய்க் கண்ணகி விண்ணில் தோன்றினாள். கண்ணகியின் தெய்வக் காட்சியைக் கண்ட செங்குட்டுவன் பெரும் வியப்படைந்து,

என்னேயிஃ தென்னேயிஃ தென்னேயிஃ தென்னேகொல்
பொன்னஞ் சிலம்பில் புனேமே கலைவளைக்கை
நல்வயிரப் பொற்ருேட்டு நாவலம் பொன்னிழைசேர்
மின்னுக் கொடியொன்று மீவிசும்பில் தோன்றுமால்

என்று கூறி மகிழ்ந்தான். விண்ணில் தோன்றிய கண்ணகி,

'பாண்டியன் குற்றமுடையவன் அல்லன். அவன் தேவர் கோமானுகிய இந்திரன் கோயிலின்கண்ணே அவர்கட்கு நல்ல விருந்தாளியாக ஆனுன். நான் அப் பாண்டியனுடைய மகளாவேன். வெற்றி வேலையுடைய முருகனது இம்மலைக்கண்ணே நான் என்றும் எழுந்தருளியிருந்து விளையாடல் புரிதலை ஒழியேன்; தோழிகாள்! எல்லோரும் என்னுடன் வாருங்கள்!' என்று மொழிந்தாள். இத்திருவாக்கைக் கேட்டு ஆங்குக் குழுமியிருந்தோர் கண்ணகியைத் தொழுது புகழ்ந்தார்கள். கண்ணகி செங்குட்டுவனை வாழ்த்தி விண்ணில் மறைந்தாள். பின்னர் ஆங்குப் பலவகையான ஆடல் பாடல்கள் நிகழ்ந்தன.

## 30. வரந்தருதல்

பெண்கள் மூவரும் புலம்பியபோது 'மணிமேகலை துறவுங் கேட்டாயோ தோழி' என்று புலம்பியதைக் கேட்டுக் கொண்டிருந்த செங்குட்டுவன் பின்னர்த் தேவந்தியை நோக்கி' நீபுலம்பியபோது கூறியமணி மேகலை என்பவள் யார்? அவள் துறவு கொள்ளுதற்குக் காரணம் யாது?' என்று கேட்டான். அதற்குத் தேவந்தி 'கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்தவள் மணிமேகலை. அவள் மிகுந்த பேரழகு படைத்தவள்.

அவள் தக்க காலத்தை யடைந்தாள். ஆயினும் தன் தந்தையாகிய கோவலன் கொலையுண்டு இறந்த துக்கத்தின் மிகுதியால்தன் குலத் தொழிலிலேபுகாமல் வருந்தி யிருந்தாள். மாதவியின் தாயாகிய சித்திராபதி என்பவள் தன் மகள் மாதவியைப் பார்த்து, 'உன் மகள் மணிமேகலை குலத் தொழிலிலே புகாமல் இருக்கின் றாளே! இதற்கு என் செய்வது?' என்று கேட்டாள். அதற்கு மாதவி 'கற்புக்கரசியாகிய கண்ணகியினு டைய மகள் விலைமகளாதற்குரியவளல்லள் என்று கூறிவிட்டு மணிமேகலையைத் தன்னுடன் அழைத்துச் சென்று அவள் கூந்தலைக் களைந்து, போதியின் கீழி ருந்த மாதவர்பால் ஒப்புவித்து அறவழிப்படுத்தினாள். இவ்வாறு அவள் இளவயதிலேயே துறவுக் கோலம் கொண்டமையைக் கேள்வியுற்று அரசனும் நகரமக்க ளும், உயர்ந்த நல்ல மாணிக்கத்தைக் கடலினிடத்தில் போட்டுவிட்டவர்களைப் போன்று வருந்தினார்கள். மணிமேகலை இவ்வாறு இளமையிலேயே துறவுக் கோலம் பூண்டதை எண்ணித்தான் நானும் அவ்வாறு புலம்பினேன் என்றாள்.

அப்போது தேவந்தியின் மேல் தெய்வ ஆவேசம் ஏறிற்று. அவள் கூந்தல் குலைந்து தாழ்ந்தது. புருவம் துடித்தது. வாய் மடிந்தது. பற்கள் வெளிப்பட்டன. மொழி தடுமாறிற்று. முகம் வியர்த்தது. கண்கள் சிவந் தன. இவ்வாறு தெய்வமேறப் பெற்ற தேவந்தி மாட லனைப் பார்த்துக் கூறலானாள்.

'மறையோனே! நான் பாசண்டச்சாத்தன். இந்தத் தேவந்திமீது பொருந்தியுள்ளேன். இங்குக் கண்ணகி தேவியின் திருவிழாக் காணவந்த மகளிருள் அரட் டன் செட்டியின் மனைவி பெற்ற இரட்டைப் பெண்

களிருவரும், திருவனந்தபுரம் சேடக்குடும்பியின் சிறு பெண் ஒருத்தியும் இருக்கின்றனர். அம்மூவர்களின் மீதும் உன் கையிலுள்ள கமண்டல நீரைத் தெளிப் பாயாக.அந்தநீரை நீமங்களாதேவி கோயிலில் இருந்த போது பார்ப்பானாக வந்து உன் கையிலே தந்தவன் நான்தான். அஃது இம்மலையிலுள்ள ஒரு சுனையிலி ருந்து எடுக்கப் பெற்றது.அந்நீர் வெள்ளிய நிறமுடை யது. அச்சுனையில் படிந்தோர் முற்பிறவியின் நினைப்பு அடைவர். அந்நீரின் தெய்வத் தன்மை ஞாயிறு திங் கள் உள்ள அளவும் ஒழியாது. இம்மகளிரின் மீது அந்நீரைத் தெளித்தால் இவர்கள் முற்பிறப்பின் உணர்ச்சியை அடைவர்' என்று பாசண்டச் சாத் தான் ஏறப்பெற்ற தேவந்தி கூறினாள்.

இதனைக் கேட்ட செங்குட்டுவன் வியப்படைந்து மாடலமறையோனை நோக்கினான். மாடலன் செங் குட்டுவனுக்குத் தேவந்தியின் வரலாற்றைக் கூறிப் பிறகு அப்பெண்கள் மூவர்மீதும் கமண்டல நீரைத் தெளித்தான்.

உடனே அச்சிறுமியர் மூவருக்கும் முற்பிறப்பின் உணர்ச்சியும் மனநிலையும் உண்டாயிற்று. அவர்கள் கோவலனையும் கண்ணகியையும் நினைத்துப் பலவாறு புலம்பினர். அவர்கள்புலம்பியதிலிருந்து கண்ணகியின் தாயும் கோவலன் தாயும் அரட்டையனுக்கு இரட் டையராய்ப் பிறந்தனரென்பதும், மாதரி சேடக் குடும்பியின் மகளாய்ப் பிறந்தாள், என்பதும் தெரிய லாயின.

அவர்கள் புலம்பியதனை நன்கு புரிந்துகொள் ளாத செங்குட்டுவன் மாடலன் முகத்தைப் பார்த் தான். செங்குட்டுவனை நோக்கி 'மாடலன் இம்

மூவரும் யாவர் என்பதை அவர்களுடையவாய்மொழி மூலம் உணர்ந்து கொண்டனையன்றே? இவர்கள் கண்ணகி கோவலன் மீது மிகுந்த அன்புடையவர்கள். ஆயினும் அவளுடன் விண்ணுலக கடையத்தக்க நல்லறத்தைப்புரிந்திலர். ஆயினும், அவர்கள் இந்நாட்டிலே வந்து பிறந்திருக்கின்றனர். இதனால் நல்லறம்புரிந்தவர் நன்னிலை பெறுதலும், ஒருவர்பால் அன்புமிக்க உள்ளமுடையவர்கள் அன்புவைத்தவிடத்திலே பிறத்தலும், ஒருவரது அறப்பயனும் மறப்பயனும் தப்பாது உண்டாதலும், பிறந்தவர் இறத்தலும், இறந்தவர் பிறத்தலும் புதுமையானவைக ளல்ல; படைப்புக் காலந் தொட்டே நிகழ்ந்துவருவன வாகும் என்பது பெறப்படுகின்றதன்றே? நீ முக்கண் இறைவன் திருவருளால் தோன்றி இப்பெரிய உலகத்தினை விளக்க முறச் செய்த அரசனாகையால், செய்யப்பட்ட தவத்தின் பயனாகவுள்ளவற்றையும் உயர்ந்தோரது படிவத்தையும் உள்ளங்கை நெல்லிக்கனி போல் அறிந்திருக்கின்றாய். நீ இந்நில வுலகினைப் பல்லூழிக்காலம் காத்துஇனிது வாழ்வாயாக" என்று வாழ்த்தினான்.

செங்குட்டுவன் கண்ணகி கோவிலின் வழிபாட்டை நாடோறும் நடத்தும் வண்ணம் தேவந்தியை ஏற்படுத்தினான். கண்ணகி கோயிலை மும்முறை வலம் வந்து பணிந்து நின்றான்.

அப்போது செங்குட்டுவனுடனிருந்த ஆரிய அரசரும் இலங்கைக் கயவாகு மன்னனும் பிறரும் கண்ணகியை வணங்கி, "இவ்வரசன் செய்தவாறே நாங்களும் எங்கள் நாட்டில் நின்னை நாட்டி விழாவழிபாடு முதலியன செய்யக் கருதுகின்றோம். ஆங்கும் நீ

எழுந்தருளி அருள்புரிதல் வேண்டும்'' என்று வேண்டிக்கொண்டனர். அப்பொழுது 'அப்படியே வரம் தந்தேன்' என்று விண்ணில் ஒரு குரல் எழுந்தது. இது கேட்டார் அனைவரும் மட்டற்ற மகிழ்ச்சியடைந்தனர். அதன் பின்னர்ச் செங்குட்டுவன் முதலியோர் வேள்விச் சாலையை அடைந்தனர்.

பிறகு இளங்கோவடிகள் கண்ணகி கோவிலுக்குச் சென்றார். அப்போது கண்ணகி தேவந்திமேல் தோன்றி, இளங்கோவடிகளைப் பார்த்து, "நீ வஞ்சி மூதூரில் அழகிய மண்டபத்தில் உன் தந்தையோடும் உடன் பிறந்தவனாகிய செங்குட்டுவனோடும் இனிது வீற்றிருந்தாய். அப்போது அங்கு ஒரு நிமித்திகன் வந்தான். அவன் உன்னிடம் அரசுபுரியும் இலக்கணம் இருக்கிறதென்று சொன்னான். அதனைக் கேட்ட நீ "மூத்தவன் இருக்கையில் இளையவன் அரசுபுரிவான் என்று நீ இவ்வாறு முறைகெடக் கூறியது தவ' றென்று சினந்தாய். அவன் மொழியைப் பொய்ப்பிக்கும்படி துறவுக்கோலம் பூண்டு குணவாயில் கோட்டத்தில் அமர்ந்தாய். இனிமேல் சிந்தை செல்ல முடியாத அவ்வளவு சேணிலிருக்கும் வீடுபேறாகிய அரசை ஆளும் வேந்தனாக விருக்கின்றாய்'' என்று இவ்வாறு இளங்கோவடிகளின் வரலாற்றையும் சுருக்கமாகக் கூறினாள். கற்புக்கரசியாகிய கண்ணகியின் வரலாற்றினைக் கூறும் இச் சிலப்பதிகார நூலினைக் கேட்ட எல்லோரும்,

பரிவும் இடுக்கணும் பாங்குற நீங்குமின்
தெய்வந் தெளிமின் தெளிந்தோர்ப் பேணுமின்
பொய்யுரை அஞ்சுமின் புறஞ்சொற் போற்றுமின்
ஊனூண் துறமின் உயிர்க்கொலை நீங்குமின்
தானம் செய்ம்மின் தவம்பல தாங்குமின்

செய்ந்நன்றி கொல்லன்மின் தீநட் பிகழ்மின்
பொய்க்கரி போகன்மின் பொருண்மொழி நீங்கன்மின்
அறவோர் அவைக்களம் அகலா தணுகுமின்
பிறவோர் அவைக்களம் பிழைத்துப் பெயர்மின்
பிறர்மனை அஞ்சுமின் பிழையுயிர் ஓம்புமின்
அறமனை காமின் அல்லவை கடிமின்
கள்ளும் களவும் காமமும் பொய்யும்
வெள்ளைக் கோட்டியும் விரகினில் ஒழிமின்
இளமையும் செல்வமும் யாக்கையும் நிலையா
உளநாள் வரையா தொல்லுவ தொழியாது
செல்லுந் தேஎத்துக் குறுதுணை தேடுமின்
மல்லன்மா ஞாலத்து வாழ்வீ ரீங்கென்.

முற்றும்